# க. வள்ளலார் யார்?

வள்ளலார் யார்? மாநிலம் உய்ய மருதூர்ப்பதியில் அவதரித்தவர் வள்ளலார். தந்தையின் கையில் ஐந்து மாதக் குழந்தையாக இருந்தவர், தில்லைப்பொன்னம்பலத்தின் முன்னர், ஆண்டவன் தாண்டவக் கோலத்தைக் கற்பூர வொளியாற் கண்டு கலகலவெனச் சிரித்தவர் வள்ளலார். தாம் பிறந்த ஆறுவது திங்களிலேயே அருமைத் தந்தையை இழந்து தவித்தவர் வள்ளலார். பள்ளிப் படிப்பில் உள்ளங் கொள்ளாது வள்ளற் பெருமானின் திருவருள் ஞானத்தைப் பெறுதற்கு ஆசைகொண்டு வாடி நின்றவர் வள்ளலார். கற்பிக்கும் ஆசிரியரும் கலங்கிக் கைவிடுமாறு மெய்ஞ் ஞானம் கைவரப் பெற்றவர் வள்ளலார்.

தமையனாரின் தணியாத கோபத்திற்கு ஆளாகி உணவின்றி, நல்ல உடையின்றி, நடை மெலிந்து, காடும் மேடும் கல்லும் முள்ளும் அல்லலுற்று அலைந்து திரிந்தவர் வள்ளலார். தணிகை முருகன்மீது தணியாத காதல்கொண்டு, ' தணிகை மலையைச் சாரேனோ! சாமி அழகைப் பாரேனோ!' என்று ஏங்கி வாழ்நாள் முழுதும் பாடித் துடித்தவர் வள்ளலார். நிலைக்கண்ணாடியில் தணிகை முருகன் திருக்கோலத்தைக் கண்டு தரிசித்துத் தண்டமிழ்ப் பாடல்களை உள்ளுருக ஊனுருகப் பாடியவர் வள்ளலார். ஒன்பதாண்டுப் பருவத்திலேயே

அருட்கவிச் செல்வத்தை
பாய ...யவர் வள்ளலார். பத்து வயதி...
உயரி... ...ாமணக்கக், கேட்போர் உளம் இனிக்...
வுய் உரிவுரையாற்றும் திருவருள்திறன் பெற்ற...
ள்ளலார்.

சென்னைக் கந்தகோட்டத்துப் பெருமானிடத் அந்தமில்லாப் பேரன்பு பூண்டவர் வள்ளல... திருவொற்றியூர் ஈசன்பால் கொண்ட நேசத்தா... தம் உள்ளத்தையே அப்பெருமானுக்கு ஒற்றிவை... தவர் வள்ளலார். ஒற்றி வீதியில் போவார் வருவ... அனைவரையும் இகழ்ந்துரைத்து அமர்ந்திருந்த துறவ... ஒருவரால் ' இவர் உத்தம மனிதர் ' என்று பாராட்ட... பெற்றவர் வள்ளலார். உறவினர் உள்ளங்களைக் குளி... விக்கத் தம்முடைய தமக்கையார் உண்ணுமுலையம்மை... யாரின் அருமைத் திருமகளை மணம்புரிந்து கொண்ட... வள்ளலார். எனினும் சிற்றின்பத்தில் பற்றின்றி... சிந்தையைச் சிவத்தில் ஊன்றியவர் வள்ளலார்.

மாணிக்கவாசகர் அருளிய மனநின்று உருக்கு... மதுரவாசகத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்த... வள்ளலார். சுந்தரரது செந்தமிழ்த் தேவாரப்ப... களில் சிந்தை சொக்கி நின்றவர் வள்ளலார். திருவ... கத்தின் தெளிவுரையே எனத் தேர்ந்தவர். போற்... தெள்ளமுதப் பாக்களை அள்ளிக் கொழித்தவர்... லார். ஒற்றிவாழ் அருளம்மையே, தந் தமக்... வொடு வந்து உணவூட்ட உண்டு பசியொழி... பேறு பெற்றவர் வள்ளலார். நாடறிய நீ... விளக்கிட்ட நாயனார் நமிநந்தியாரைப் போன்... குழியன்பர் வேங்கட ரெட்டியார் வீட்டில் த...

...மார்க்கச் சிவநெறி' என்று உலகினர்க்கு விள... வள்ளலார். தம்மைக் காணவரும் அன்பர் கூட்...ற்கு, "நீவிர் அருள் உருவப் பெருமானைக் காண ...ரும்புவீராயின் கொல்லாமையென்னும் நல்லறத்தை — ...யிர்கட்கு இரங்குதல் ஆகிய அருளறத்தை வாழ்க் ...கையில் மேற்கொள்வீராக!" என்று அறவுரை பகர்ந் ...ளியவர் வள்ளலார். 'ஒருவன் எத்துணை வல்லமை ...டைத்தவனாயினும், இரங்காது உயிருடம்பைக் கடிந் ...ன்னும் கருத்தனேல், குருவாணையாக, எமது சிவ... ...காழுந்தாணையாக, அவனை ஞானியெனக் கூற ...ண்ணாது' என்று ஞானிக்கு இலக்கணம் வகுத்தரு... ...ர் வள்ளலார்.

'புலால் உண்ணுதல் பொருந்தாச் செயல்; புலா... ...ண்பவன் இல்லத்திற் புசிப்பவனும் புலையே... ...காலை செய்வோன் வீட்டில் உணவு கொள்பவ... ...காலைஞனே' என்னும் அருள்மொழிகளை மக்களு... ...ற்புறுத்திப் பொறப்புறச் சொல்லியவர் வள்... ...ாதியிலே, மதங்களிலே, சமயநெறிகளிலே, ச... ...ந்தடிகளிலே, கோத்திரச் சண்டையிலே, ஆ... ...பிமானித்து அலைகின்ற உலகினர்க்கு, "நீவிர் அ... ...ந்து வீணே அழிதல் அழகன்று; நீதியி... ...ர்க்க நிலையிலே ஞானநிருத்தமிடும் தனித்தலை... ...ரே யுளர்; அவர் வருந்தருணம் இது! அருட்... ...ற்கு வாருங்கள்! வந்தால் இன்ப... ...! எண்மை உரைத்தேனல்லேன்; உண்மை... ...ர்" என்று, தாம் பெற்ற இன்பத்தை ... உயிரெல்லாம் பெற்றுய்ய அறைகூவி... ...தருளியவர் வள்ளலார். 'மேல் வருணம், தோல் ...ணம் கண்டு சிலம் அறிவாரில்லை; நால்வருணம்

ரில் விடியுமட்டும் நீரால் விளக்கெரித்த பேரரு வள்ளலார். தம்மைத் தீண்டிய பாம்பே ம டொழியச் செய்து, விடத்தால் வருந்தாது இருந்த வள்ளலார். உண்ட மருந்தாலும், உடல் முழுதும் பூசிக்கொண்ட மருந்தாலும் குணங்காணுது சிரங்கு நோயால் வாடிய, தமது முதல் மாணக்கராகிய தொழூவூர் வேலாயுத முதலியாரின் சிரங்கு நோயைத் திருநீறளித்துத் தீர்த்தருளியவர் வள்ளலார்.

தில்லை அம்பலக்கூத்தனிடத்துக்கொண்ட ஆலை ால், தமது ஊருக்கு அருகில் தில்லைக்கோவிலை போன்றே உத்தர ஞான சிதம்பரம் அமைக்க உள் கொண்டவர் வள்ளலார். அவ்உத்தரஞான சித ாகிய வடலூர்ப் பெருவெளியில் முதற்கண் உ ரின் பசித்துயரை ஒழிப்பதற்கு அறக்கூழ்ச்சா த்திய தருமச்சாலை) ஒன்றை அமைத்தவர் வள்ள ர். அங்குச் சாதி சமய வேற்றுமைகளை வேரோ யெறிந்தவர் வள்ளலார். 'என்னை வெட் பிறரிடம் சென்று கேளேன்; கேட்டாலு னை உடையானிடம் சென்று கேட்பேன்' என் று பேசி நின்றவர் வள்ளலார். உடற்பசி தணி க்கள் உள்ளப்பசியைத் தீர்த்துக்கொள்ள அறி வத் தரும் பொதுமறைக் கல்விக் கழகத்தை ( பத பாடசாலை) வடலூர்க்கண் நிறுவியவர்

மேட்டுக்குப்பம் சித்திவளாகத் திரு கடவுளின் அருட்பெருஞ்சோதி வடிவை அருட்பெருஞ்சோதி அகவலை அருளிச்செய்தவ லார். 'திருநெறி ஒன்றே! அதுதான்

, ஆசாரம் எல்லாம் பிள்ளை விளையாட்டே
... ...சிய பெருமான் வள்ளலார். 'நானுரைக்கும்
...ர்த்தையெல்லாம் நாயகன்சொல் வார்த்தையன்றி,
நானுரைக்கும் வார்த்தையன்று நாட்டீர்!' என்று
சொல்லி, நாட்டினர்க்கு நல்லுரை பகர்ந்தவர் வள்ள
...ார்.

வடலூர்ப் பெருவெளியில் ஞானசபை யமைத்து,
...றைவன் சோதி வடிவினன்; திருவளர் ஒளியாகத்
...ழ்பவன்' எனத் தெளிவுறுத்தத் தொண்ணூறு
...ண்டுகட்கு முன்னர் ஒரு தைப்பூச நன்னாளில் நிலைக்
...ணாடியின் முன்பு பேரொளித் தீக்கொழுந்தை
...றுவிப் பல்லாயிர மக்களைத் தரிசிக்கச் செய்தவர்
வள்ளலார். வீதியிற் கைவீசி நடக்க நாணிக் கைகளைக்
... ...ாண்டே நடந்தவர் வள்ளலார். தமது
...ான்ற திருமேனியை வெளியே காட்ட
...ண் துகிலால் மறைத்துச் சென்றவர் வள்ள
...ந்த ஆசனத்தில் அமரவும், காலின்மேல்
...க்கவும், பாட்டயல் கேட்கப் பாடவும்,
...கண் படுக்கவும், திண்ணையில் அமர்ந்து கால்
...ற நீட்டவும், நீட்டிப் பேசுதலை நினைக்கவும்
...ஞ்சத்தை அடக்கி நின்றவர் வள்ளலார்.

...து ஆண்டுகளாக உலகில் வாழ்ந்து அருளறம்
... பத்தாயிரம் தித்திக்கும் செந்தமிழ்க் கனி
...ரச் செழுஞ்சுவை அருட்பாக்களைப் பாடிச் சமரச
...ன்மார்க்க தீபத்தை மக்கள் மனத்தில் ஏற்றி மங்காது
...ளிவீசச் செய்தருளியவர் வள்ளலார். அருட்பாவை
...மருட்பாவெனப் பழித்து வழக்காடிய மாற்றுரையும்,
தமது அருள் ஒழுகும் தோற்றத்தால் மனங்கசிந்து

பணியுமாறு செய்தவர் வள்ளலார். வடலூர்
வெளியில் ஞானசபையைக் கண்டு மகிழ்ந்த
ஆண்டில், சிருமுக ஆண்டுத் தைத்திங்கள் புனர்பூச
தன்று இரவு பதினைந்து நாழிகையளவில், மேட்டுக்
குப்பத்துச் சித்திவளாகத் திருமாளிகையுள், 'நிச்சலும்
பேரானந்த நித்திரை செய்கின்றேனே' என்று
மொழிந்து நுழைந்து, திருக்கதவினைத் தாழிட்
மறைந்தருளிய பெருமானார் வள்ளலார்.

வள்ளல் என்ற சொல், தன்னை யடைந்த வ
யோர்க்கு இல்லையென்று சொல்லாமல் அள்ளியள்
உள்ளத்தோடு கொடுத்து மகிழ்ச்சி கொள்ளு
கொடையாளியைக் குறிக்கும். அவ்வாறு வரையா
கொடுக்கும் கொடையாளிகள், உலகில் கோடிக்கொரு
வராகவே விளங்குவர் என்பது ஆன்றோர்
துணியாகும். 'தாதா கோடிக்கொருவர்'
தமிழ் மூதாட்டியாரின் அமுத மொழி.

கோடிக்கொருவராகத் திகழும் வ
புல்லரிடத்தும் உள்ளதாகிய பொருட்
வழங்குவோரே. செல்வத்துட் செல்வமாகத்
அருட்செல்வமே. 'அருட்செல்வம் செல்வத்
வம' என்பது வள்ளுவர் வாக்கு. இறைவன
செல்வத்தை வாரி வழங்கும் சீரியோரே வ
என்று வாயார வாழ்த்தி வணங்குதற்கு உரியோ
அத்தகைய அருள் வள்ளல்கள், பல கோடிக் கொரு
ராகத் தான் பாரில் தோன்ற முடியும். பல கோட
மக்களுள் ஒருவராக, மிக்க அருட்செல்வத்தைத் த
கா க்கு வழங்கும் பேரருள் வள்ளலாராக, இந்த இருப
த ம் நூற்றாண்டில் இலங்கிய பெருமான் மகாத்துமா

-கள் என்று —சான்னுல் உலகமே உவந்து காள்ளும்.

அருளறமே தலை ாய அறம்' என்று இரண்டா பி ம் ஆண்டுகட்கு முன் பே, நந்தம் செந்தமிழ் நாட்டில் வந்தவதரித்த தன்னி கரில்லாத் தெய்வத் தமிழ்ப் பெரும் புலவராகிய தி நவள்ளுவர் உலகிற்கு எடுத்துக் காட்டினர். அதனையே. புத்தரும் இயேசுவும் நபியும் சித்தரும் நானிலத்திற் கு வலியுறுத்திக் காட்டி வாழ்ந்து மறைந்தனர்.

இத்தகைய அருளறத்தின் மேம்பாட்டைப் ாருள் பொதிந்த இன்னிசைப் பாக்களால்—பார்த் ம் நினைத் தாலும் படித்தாலும் படிக்கப் பக்க கேட்டா லும் ரிந்து உள்ளுணர்ந்தாலும் இத் திக்கும் இனித்த சுவைப் பாக்களால்— ணிவிக்கும் நனிசுவைத் தனிமதுரச் செஞ் சமுமபாக்களால் தமிழுலகிற்கு விளக்கிய அருட்பிரகாச வள்ளலார் என்னும் சிதம் மலிங்க அடிகளாவர். மக்கள் உய்ய— பெருவாழ்வைப் பெற அருள்நலங் கனியும் மழை பொழிந்த பெரியாராகிய சிதம்பரம் க அடிகளே, 'வள்ளலார்' என்று வையகம் புனிதராவார்.

ர் வள்ளலாராகிய இராமலிங்க அடிகளின் சுவைப் பாக்களைத் தொகுத்த, அவர்தம் ஷக்கராகிய தொழுவூர் வேலாயுத முதலியார் றினர், நூலின் முகப்பில் 'அருட்பிரகாச வள்ள சிதம்பரம் இராமலிங்க அடிகள் பாடியருளிய ன்று குறித்தார். இதனை ஒருகால் கண்

ணுற்ற அடிகளார், தம் மணுக்கரை அ
"அருட்பிரகாச வள்ளலார் எனும் இறைவ
திருப்பெயரை, இழிந்தவனுகிய எனக்குச்
தகுமா? இச்செயலை யாரிடம் உத்திரவு பெற்று
திர்? உடனே அதனை நீக்கும்" என்று சினந்து
குருவின் சினத்திற்கு ஆளாகிய முதலியார் அ
நடுங்கி, அவர் பாதங்களிற் பணிந்து பொறு
மாறு வேண்டினர். மீண்டும் தமது அறிவுத்
அடிகளாரிடம் கருத்தொன்றை விண்ணப்ப
"அடிகளே! தங்கள் கருத்துப்போல் 'அருட்
வள்ளல்' என்பது ஆண்டவனையே குறிக்கும்
அருட்பிரகாச வள்ளல் யார்? யார்? என்று
தேடித் திரியும் நல்லியல்புடையவர் தாங்கள்
தான் குறித்தேன்" என்று நயம்படப் பணிவ
மொழிந்தார். அதுகேட்ட அடிகளார், தம்
கரின் மாணுற்ற அறிவைப் பேணிப் பாராட்

அருட்பெருங் கவிஞராகிய இராமலிங்க
இற்றைக்கு நூற்றுமுப்பத்தேழு ஆண்டுகட
னர், சுபானு ஆண்டு, புரட்டாசித் திங்கள் உ
(5-10-1823) ஞாயிற்றுக் கிழமை உகூளு (
கைக்கு மீன லக்கினம் சித்திரை நட்சத்திரப்
கால் நல்வேளையில், சிதம்பரத்தின் வடமேற்கி
கல்தொலைவிலுள்ள மருதூர்ப் பதியில் கணக்க
குலத்தினராகிய இராமைய பிள்ளைக்கு,
ஆறுவது மனைவி சின்னம்மையாரிடத்து
குழந்தையாக அவதரித்தார். இராமலிங்கப்
அவரது பிள்ளைத் திருப்பெயர். இவருக்கு
நால்வர் சபாபதி பிள்ளை, பரசுராம பிள்ளை
மாள், உண்ணாமுலையம்மாள் என்போராவர்

குழந்தை இராமலிங்கம் பிறந்தவுடன் மருதூர்க் கண் வியத்தகு செயல்கள் பல நிகழ்ந்தன. அவற்றைக் கண்ட ஊரார், 'குமரவேளே குழந்தையாகப் பிறந்தார்' என்று கூறிக் குதூகலித்தனர். குழந்தை பிறந்த ஆறுவது திங்களில் தந்தையார் மறைந்தனர். சில திங்கள் கழிந்தபிறகு, இராமலிங்கம் மூத்த தமையனு ராகிய சபாபதி பிள்ளையுடன் சென்னைப்பட்டினம் சேர்ந்து, அங்கு வளர்ந்து ஐந்தாண்டு நிரம்பினர். தம்பியாரைப் பள்ளிக்கு வைத்தனர் சபாபதி பிள்ளை. சில ஆண்டுகள் கழிந்தன. தம் தமிழாசிரியராகிய மகாவித்துவான் காஞ்சி சபாபதி முதலியாரிடம் தமிழ் நூல்களைப் பயில விடுத்தனர். இராமலிங்கத்தின் உள்ளம் கல்வியிற் செல்லவில்லை. அவர் கந்தகோட் டத்து முருகவேளை நினைந்து நினைந்து மனங்கசிந்துருகித் திருவருளை நாடி நின்றனர்.

கல்வி கற்கச் செல்லாத பிள்ளையைத் தமையனார் வீட்டினின்று விரட்டினர். பெற்றவரைப் பிரிந்த பி[illegible] யைப் பேணாது விடுத்தல் முறைமையன்று யும் க சபாபதிபிள்ளையின் மனைவியாராகிய இராமலிங் [illegible]ன் அண்ணியார் எண்ணினர். தம் கணவர் வீட் மான் இல்லாத வேளையில் பிள்ளையை வரவழைத்து இராடியும் உடையும் உதவிக் காத்துவந்தனர். பின் பப் [illegible]த் தம் அண்ணியாரின் அன்பு குழைந்த வேண்டு [illegible]ட்கு இணங்கித் தமையனார் விருப்பம்போற் கல்வி [illegible]லுவதாக ஒப்புக்கொண்டார். வீட்டில் தனியறை [illegible]றைப் பெற்று, அங்கு நிலைக்கண்ணாடி யொன்றை [illegible]றுவிக் கற்பூர வொளியைக் காட்டிக் கருணை வள்ள [illegible]ாகிய தணிகை முருகன் காட்சியைக் காண வேணவாக் [illegible]காண்டு மனமுருகி நின்றார்.

## உ. பசிப்பிணி மருத்துவர்

மக்களை வாட்டி வருத்தும் பிணிகள் பலவற்றுள் வயிற்றுப்பசியும் ஒன்றாகும். ஆதலின் அப்பசிநோயை 'அழிபசி' என்று குறித்தருளினார் திருவள்ளுவர். இப்பசிப்பிணி எந்தப் பாவத்தையும் துணிந்து செய்யத் தூண்டும் கொடுந்தன்மை யுடையது. ஆதலின் சீத்தலைச் சாத்தனார் என்னும் செந்தமிழ்ப் புலவர் 'பசிப்பிணி என்னும் பாவி' என்று பழித்துரைத்தார்.

இத்தகைய பசி நோயால் வாடிய பைந்தமிழ் மூதாட்டியார், 'அந்தோ! வயிறே! உன்னோடு வாழ்தல் அரிது' என்று இகழ்ந்து பேசினார். 'ஒரு நாள் உணவை ஒழியென்றாலும் வயிறு கேட்பதில்லை. உணவு மிகுதியாகக் கிடைக்கும்போது, இரு நாட்களுக்குச் சேர்த்து உண்டு கொள்க என்றாலும் ஏற்பதில்லை; என்றும் துன்பத்தையே உண்டுபண்ணிக் கொண்டிருக்கிறது; எனது நோவை அறியாத இடும்பை மிக்க வயிறாக அன்றோ இருக்கிறது!' என்று வயிற்றுப்பாடலே பாடிவிட்டார் அம்மூதாட்டியார்.

'ஒருநாள் உணவைஒழி யென்றால் ஒழியாய்
இருநாளைக்(கு) ஏலென்றால் ஏலாய் — ஒருநாளும்
என்னோ வறியா யிடும்பைகூர் என்வயிறே
உன்னோடு வாழ்தல் அரிது'

என்பது அவரது வயிற்றுப்பாடல் ஆகும்.

கால்நடையாகவே நாடும் காடும் நடந்து கடந்து நாடெங்கும் சுற்றிவந்த ஔவையார் பலகால் தாமும் பசிநோயால் வாடி வருந்துவார். பசிப்பிணியால்...
ளரா

வாடும் மக்களையும் பார்ப்பார். அவர்கள் நிலையைக் கண்டு பலகால் இரங்குவார். தாம் பசிப்பிணியால் வாடும்போது தமது உளநிலை இருக்கும் விதத்தையும் எண்ணுவார். அத்தகைய அனுபவ முதிர்ச்சியின் காரணமாகப் 'பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்' என்று மொழிந்தருளினர். மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை, தானம், தவம், உயர்ச்சி, தாளாண்மை, மாதர்மீது கொள்ளும் காதல் ஆகிய பத்துப் பண்புகளையும் பசிநோய் வாட்டும்போது மனிதன் மறந்தே போகிறன். நல்லியல்பை எல்லாம் மறந்து போகுமாறு செய்யும் இப்பசியைப் பாவி யென்று சொல்லாமல் என்னவென்று சொல்வது! அதிலும் வறுமையொடு கலந்த பசியாயின் எல்லாச் சிறுமைகளையும் தானே தேடிக்கொள்ளும். இத ணலேயே அம்மூதாட்டியார்,

'கொடிது கொடிது வறுமை கொடிது
அதனினும் கொடிது ஆற்றெணுப் பசிநோய்'

என்றும் பாடி வைத்தார்.

பசிப்பிணி செய்யும் கொடுமைகளைக் கூறவந்த மணிமேகலை ஆசிரியர்,

குடிப்பிறப் பழிக்கும் விழுப்பம் கொல்லும்
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்
நாணணி களையும் மாணெழில் சிதைக்கும்
பூணணி மாதரொடு புறங்கடை நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி'

என்று பழித்துப் பேசினர். பிறந்த குடியின் பெருமையினைக் கெடுப்பது பசிநோய். அது தேடிய புகழை யெல்லாம் ஓடுமாறு செய்யும். கற்ற கல்வியெல்லாம் உள்ளத்தைவிட்டு ஒழியும். நாணம், மானம் எல்ல

நலிந்து மறைந்து போகும். கட்டழகெல்லாம கட்டழிந்து சிதையும். கட்டிய மனேவியுடன் இல்லந் தோறும் சென்று பிச்சை யெடுக்குமாறு செய்யும். இத்தனை கேடுகளையும் ஒருங்கு செய்யும் கொடுங் குணம் படைத்த இக்கொடிய நோயைப் போக்குவார் புகழை வாக்கால் அளந்து சொல்ல முடியாது என்று கூறினர் அப்புலவர்.

‘பசிப்பிணி என்னும் பாவியது தீர்த்தோர்
இசைச்சொல் அளவைக்(கு) என்நா நிமிராது’

என்பது அவரது வாய்மொழியாகும். பசிப்பிணி தீர்க்கும் பண்புடையோர் அளவிட முடியாத பெரும் புகழுக்குப் பாத்திரமாவர்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்ப் பண்ணன் என்னும் வள்ளல் ஒருவன் வாழ்ந்தான். அவன் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன். பழுத்த மரத்தை நாடிச் செல்லும் பறவைகளைப் போலப் பண்ணனது இல்லத்தைத் தேடி இரவலர் வந்தவண்ணமாகவே இருப்பர். அங்ஙனம் நாடி வந்த புலவர் ஒருவர் கூற்றாகக் கிள்ளிவளவன் என்னும் சோழ மன்னன்,

பசிப்பிணி மருத்துவன் பண்ணன் இல்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே’

என்று பாடினன்.

புலவர் பாடும் புகழுடைய பண்ணனைப் போலச் சென்ற நூற்றாண்டில் சிறந்த பசிப்பிணி மருத்துவராகத் திகழ்ந்தவர் இராமலிங்க வள்ளலார். அவர் வறுமையில் வாடும் ஏழை மக்களின் கொடும்பசி [illegible]ற்ற வடலூர்ப் பெருவெளியில் சத்தியதருமச்

சாலையை நிறுவினார். அங்குப் பசியால் வாடிவரும் மக்களையெல்லாம் மலர்ந்த முகத்துடன் வரவேற்று இன்சுவை உணவையூட்டிப் பசியாற்றினார். சாதி சமய இன வேறுபாடின்றி நாள்தோறும் நாடிவரும் பசியாளர் யாவராயினும் அவர்க்கு உணவூட்டி மகிழ்வார்.

இங்ஙனம் பசிப்பிணி தீர்க்கும் மருத்துவராக விளங்கிய இராமலிங்க வள்ளலார், தமது தருமச்சாலையில் உண்டு பசியாறிய மக்கட்கு அறவுரை பகர்ந்தருளினார். அறவுரை நிகழ்த்துவதற்கென்றே சமரச வேத பாடசாலை யொன்றையும் அங்கே நிறுவினார். அறவுரை கேட்ட அடியவரெல்லாம் அருட்பெருஞ் சோதி ஆண்டவனை ஒன்றியிருந்து கண்டு மகிழ்தற்குச் சத்திய ஞான சபையை அமைத்தருளினார். அருள் ஒளியின் வடிவாகத் திகழும் கடவுளைத் தனிப்பெருங் கருணை நெறியால்தான் அடைய முடியும் என்று அறவுரை அருளினார். 'அருட்பெருஞ்சோதி—தனிப் பெருங்கருணை' என்ற அருள் மந்திரத்தை எல்லோரும் உணருமாறும், உணர்ந்து ஓதுமாறும், அதன்வழி நிற்குமாறும் வற்புறுத்தி வானகம் புகுந்தார். பசிப்பிணி தீர்க்கும் மருத்துவராய் விளங்கிய வள்ளலார், பிறவிப் பிணி தீர்க்கும் மருந்து யாதெனக் காட்டி மறைந்தருளினார்.

நல்ல மருந்(து)இம் மருந்து—அன்பர்
நாடும் வைத்திய நாத மருந்து'

என்பது அவரது அருள்மொழியன்றோ?

---

## ரு. தித்திக்கும் தெள்ளமுது

அமிழ்தம் மிகவும் இனியதொரு பொருள் என்று நூல்கள் வாயிலாக அறிந்துள்ளோம். அதனை உண்டு சுவை கண்டவர் உலகில் எவருமிலர். 'தெள்ளமுதம் உண்டறிவார் தேவரே' என்று உரைத்தார் ஆலங்குடி வங்கனார். அது மூவாமைக்கும் சாவாமைக்கும் காரணமான தேவாமுதம் என்று கூறுவதுண்டு. அதனை 'இந்திரர் அமிழ்தம்' என்றே செந்தமிழ் வல்ல செழியனாகிய இளம்பெருவழுதி இயம்பினான்.

விருந்தோம்பலைப் பற்றி விளக்கவந்த திருவள்ளுவரும் அதனைச் 'சாவா மருந்து' என்று வலியுறுத்தினர்.

'விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று'

என்பது அவர் வாய்மொழியாகும். இறப்பினை நீக்கும் சிறப்பான தேவாமுதமாயினும் விருந்தினர்க்கும் கொடுத்தே அருந்த வேண்டும் என்று அறிவுறுத்தினர் அப் பொய்யில்புலவர். 'இன்சொல்லும் தன்பால் இருக்க வன்சொல்லை வழங்குவது, கனி இருக்கவும் காயினை உண்டதற்கு ஒப்பாகும்' என்பர் அவ்வொப்பில் புலவர். கனி என்பதற்கு விளக்கம் கொடுத்த உரையாசிரியராகிய பரிமேலழகர் 'ஔவையுண்ட நெல்லிக் கனி போல அமிழ்தாவனவற்றை' என்று குறித்தார்.

ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னர் விளங்கிய தமிழ் மூதாட்டியாராகிய ஔவையாரேனும் அமிழ்தனைய கனியொன்றை அருந்தும் பேறு பெற்ருர். மற்றை யோர்க்கு அதுவும் வாய்க்கவில்லை. பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களை ஒழிக்கவல்ல உயர்மருந்தாகிய அமிழ்த்தை இன்று ஏட்டளவிலும் பாட்டளவிலும் கண்டும் கேட்டும் வருகிரும். அதனை அடைய முயல்வதில்லை. ஒரு சில தவச்செல்வர்கள் அவ் அமிழ் தின் சுவை காண அரும்பாடுபட்டனர். அம் முயற்சி யில் வெற்றியும் கண்டனர். அவர்கள் இறைவன் அருளாகிய தெவிட்டாது தித்திக்கும் தெள்ளமுதை அள்ளியள்ளிப் பருகினுர்கள். அந்த இன்பத்தில் ஆனந்தக் கூத்தாடினுர்கள்.

அங்ஙனம் திருவருள் தெள்ளமுதை உண்டு களி கொண்டு கூத்தாடிய அருட்பெருஞ் செல்வர்களில் அருட்பிரகாச வள்ளலாரும் ஒருவர். அவர் தாம் கண்ட சுவையின் அளவைச் சொற்களால் எவ்வளவு முடிந்த எல்லை வரையில் சொல்லலாமோ அந்த அளவில் சொல்லிச் சொல்லி இன்புறுகிருர்.

சுவையான உணவுகளையும் பண்டங்களையும் அமைக்கும் சமையல் தொழில் ஒரு கலையாகும். அச் சமையல் கலையில் மகளிரே வல்லவர் என்று சொல்லு வார்கள். ஆண் மக்களும் சிலர் அக்கலையில் வல்லவ ராய் விளங்கக் காணலாம். நிடத நாட்டை யாண்ட களன் என்னும் பேரரசன் இந்தக் கலையில் மிகவும் வல்லவன். பாண்டவர் ஐவருள் ஒருவனுகிய வீமனும் இத்துறையில் வல்லவன் என்பர். அதனுல் சுவையான உணவுப் பக்குவத்தை நளபாகம், பீமபாகம்

என்றே பழமொழியாக வழங்குவதுண்டு. அருட்பிரகாச வள்ளலாராகிய இராமலிங்க அடிகளாரும் இத்துறையில் திறமையாளராகவே காணப்படுகிறார்.

அவர் மைசூர்ப்பாகு போன்றதாகிய சுவைக் கட்டி ஒன்று செய்வதற்குப் பக்குவம் சொல்லுகிறார். அந்தப் பக்குவ முறைப்படி பண்டம் ஒன்றைச் செய்து, அதை உண்டு சுவை கண்டிருக்கிறார் வள்ளலார். அந்த அனுபவத்தையே மற்றவர்க்கும் அறிவிக்கிறார்.

மா, பலா, வாழை ஆகிய மூவகையான கனிகளில் உயர்ந்தவற்றை வாங்கி, அவற்றின் சாற்றைத் தனித் தனியே பிழிந்தெடுக்க வேண்டுமாம். எல்லாவற்றையும் ஓரே அளவுடையதாக எடுத்துப், பின் அம் மூவகைச் சாற்றையும் வடிகட்டி ஒன்றாய்க் கலக்க வேண்டுமாம். அச்சாற்றின் அளவைப் போன்று சர்க்கரையையும் கற்கண்டையும் சேர்த்து இடித்த பொடியை இருமடங்கு அச்சாற்றிலிட்டு அளாவ வேண்டுமாம். அதன் பின்னர்த் தூய தேனை அக் கலவையுடன் அதன் அளவு பெய்து விராவுதல் வேண்டுமாம். அத்துடன் அதே அளவில் பசும் பாலும் தேங்காய்ப் பாலும் கலந்து கிளறுதல் வேண்டுமாம். அதற்குமேல் வாதம் பருப்பை இடித்த பொடியை ஓரளவு அதனுடன் கலக்க வேண்டுமாம். இவற்றிற்குமேல் நெய்யை மிகுதியாகப் பெய்து நன்கு அளாவ வேண்டுமாம். போது அது ஒரு தேங்கூழைப் போல் காணப்படு[ம்]. அதனை அடுப்பில் ஏற்றி நெருப்பை எரித்து மு[...] விடாது இளஞ்சூட்டில் இறக்கி இறுக வைத்துச் சிறு கட்டிகளாகத் துண்டுசெய்ய வேண்டு[ம்]

அவற்றில் ஒரு துண்டை நாவில் நீரூற எடுத்து வாயிற் போடவேண்டுமாம். அது எவ்வளவு தித்திக்கும்? அவ் இனிப்பிற்கும் சுவைக்கும் ஓர் எல்லையும் சொல்ல இயலுமா? அதைக் காட்டிலும் தித்திக்கும் தெள்ளமுதாக இறைவன் உண்மை அடியார்க்கு விளங்குவான் என்று அதனை அனுபவித்த அனுபூதிச் செல்வராகிய அருட்பிரகாசர் தமது அனுபவத்தைக் கூறுகிறார். அவரது அனுபவம் இனியதோர் அருட்பாவாக நமக்குக் கிடைத்துள்ளது.

தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாய்க் கூட்டிச்
சர்க்கரையும் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலும் தெங்கின்
தனிப்பாலும் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
இனித்தநறு நெய்யளைந்தே இளஞ்சூட்டின் இறக்கி
எடுத்தசுவைக் கட்டியினும் இனித்திடும்தெள் ளமுதே
அனித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே!
அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கல்அணிந் தருளே.

---

## ௪. செஞ்சடைக் கனி

தித்திக்கும் முக்கனியுள் தெவிட்டாத தீங்கனியாகத் திகழ்வது பலாக்கனி. பருத்து நீண்டு விளங்கும் பலாக்கனியின் மேற்பாகம் முட்கள் நிறைந்து காணப்படும். முள் நிறைந்த மேற்றோலைச் சீவினால் உள்ளே வழுவழுப்பான நார்கள் சடைசடையாக அடர்ந்திருக்கும். அவற்றை நீக்கினால் அருமையான

தீஞ்சுளை பளபளவென விளங்கும். சுளையைப் பிளந் தால் உள்ளே உருண்டு திரண்டு நீண்ட கொட்டை யொன்று குலவும். அந்தக் கொட்டையும் மெல்லிய தோலால் மூடப்பட்டிருக்கும். அத்தோலைக் களைந் தால் இரட்டைப் பருப்பு ஒற்றையாகக் கற்றைச் சடை யீசன் அம்மையோடு செம்மைக் காட்சி தருவது போலச் செம்மை நிறத்துடன் விளங்கும்.

இத்தகைய பலாக்கனியில் தோலும் சுளையும் சடையும் முட்சதையும் அடுக்கடுக்காக மூடப்பெற் றுள்ள வித்தைப்பற்றிச் சற்று உற்றுநோக்கினுல் அதில் பொதிந்துள்ள உண்மையினை என்னென்பது! பலவின் வித்தாகிய செம்பொருள் பரம்பொருளை நினைவூட்டு கின்றதன்றோ! சுளையை உயிர் என்று கொள்ளலாம். அதனைப் பற்றியுள்ள சடையும் தோலும் முட்சதை யும் ஆகிய மூன்றனையும் மும்மலங்கள் என்று மொழிய லாம். வித்தாகிய செம்பொருளை ஒட்டிய தோலே உயிரை விடாது பற்றியுள்ள ஆணவம் என்று கூற லாம். அந்த ஆணவத்திரை அகன்றதும் ஆண்டவன் செம்பொருளாய்க் காண்டற்கரிய காட்சி நல்குவது போல வித்து விளங்குவது வியப்பன்றோ!

குற்றாலத்தில் விளங்கும் இறைவன் குறும்பலா வீசனாகப் பலவின் அடியில் இலகுகின்றான். வேரில் பழுத்த கனியைப்போல் சீருற்று விளங்குகின்றான். அத் தகைய பலாக்கனி யனைய பரம்பொருளைத் திரிகூட ராசப்பர், குறும்பலவில் தோன்றிய காயெல்லாம் சிவ லிங்கம், கனியெல்லாம் சிவலிங்கம், கனியீன்ற சுளை யெல்லாம் சிவலிங்கம், சுளையீன்ற வித்தெல்லாம் சிவ லிங்கம், எங்கு நோக்கினும் பொங்கும் கங்கைப் பு

சடையானையே தரிசிக்கிறேன் என்று உளங்கனிந்து போற்றினார்.

இங்ஙனம் செஞ்சடைக்கனியாய் இலங்கும் சிவனை அருட்பிரகாச வள்ளலார் மேற்கொன்ன கருத்தெல்லாம் பொதியச் 'செஞ்சடைக் கனியே!' என்று நெஞ் சுருகி அழைத்தார். தம் குறைபாட்டை முறையிட்டார்; அம் முறையீடு அவரைப் பற்றியதாகத் தோன்றி னாலும் ஆழ்ந்து நோக்குவார்க்கு உலகினர் நிலைமை பற்றியதாகவே காணப்படும்.

இறைவன் திருவருள் தேட்டத்தால் தெருக்கள் தோறும் அலறித் திரிந்துவந்த வள்ளலார் பெருமான் பல மக்களைப் பார்த்தார். பெரும்பான்மையான மக்கள் பேசுவதெல்லாம் பொய்யாக இருப்பதைக் கண்டார். அவர்கள் செய்யும் செயல்களெல்லாம் இழிந்தனவாக இருத்தலைக் கண்டார்; தீய எண்ணங் களே நிறைந்த நெஞ்சத்தினராக நிலவுதலையும் கண் டார். அவர்களிடத்தே அன்பு என்னும் அடிப்படை யான பண்பு அறவே இல்லாதிருத்தலையும் கண்டு உள்ளம் இரங்கினார்.

'ஐயோ! இவர்கள் இதயமெல்லாம் அன்பிற்கு இடமாக மாறுமானால் மெய்பேசும் மேலோராய், நல்லன செய்யும் நயனுடையோராய்த், தூயன எண்ணும் தூயோராய் இறைவன் திருவருளுக்கு இலக் காவரே! மனமொழி மெய்யாகிய முக்கருவித் தூய ராய்த் துலங்குவரே! எல்லோரையும் நல்லோராகக் காணும் நாள் என்றேனும் வருமோ?' என்று ஏங்கி இறைவன்பால் முறையிடும் நிறைமொழியாளராகிய இராமலிங்க வள்ளலாரின் திருவருட்பா, கருத்தை நெகிழ்விக்கும் கனியமுதமாகும்.

'பொய்வந்த வாயும் புலைவந்த செய்கையும்
புன்மைஎல்லாம்
கைவந்த நெஞ்சமும் கண்டேன்; இனிநற்
கனிவுடன்யான்
மெய்வந்த வாயும் விதிவந்த செய்கையும்
வீ(று)அன்பினால்
தைவந்த நெஞ்சமும் காண்ப(து) என்றோ? செஞ்
சடைக்கனியே!'

'செஞ்சடைக்கனி' என்று இறைவனைக் குறித்தமைக்கு ஏற்ப, இப்பாடலில் மற்றோர் உண்மையினையும் கற்றோர் உள்ளத்திற்கு விருந்தாகத் தருகின்றார் வள்ளலார். ஈசனை நேசத்தால் நினைந்து நெஞ்சம் நெக்கு நெக்குருக வேண்டுமாயின் மனத்தூய்மை, மொழித் தூய்மை, செயல் தூய்மையாகிய மூவகை நலங்கள் அமைய வேண்டும். இவற்றின் குறைகளை ஒன்றன்பின் ஒன்றாகக் களைந்தால்தான் உள்ளம் பத்தி வெள்ளம் தோன்றுவதற்கு இடமாகும். முள் நிறைந்த தோலும், சடை நிறைந்த சதையும், சுவை நிறைந்த சுளையும் அகற்றியே உள்ளமைந்த கொட்டையைக் காணுதல் போன்று, மன மொழி மெய்களின் தீமையாகிய முக்குற்றங்களையும் போக்கியே முக்கட் பெருமானை நோக்க முடியும்; அதற்கு மேலும் பத்தியாகிய கத்தி கொண்டே இடையிலுள்ள தீவினைத் திரையைக் கிழித்தல் வேண்டும் என்ற கருத்தையும் வள்ளலார் இங்கு வலியுறுத்தினார்.

---

## ரு ஆனந்தத் தேன்

நாவிற்கு இனிய நற்பொருள்கள் பற்பல உள, அவற்றுள் தேன் தலைமை வாய்ந்தது. சுவையான பொருளுக்கு உவமையாகத் தேனையும் தெள்ளமுதை யுமே சொல்லுவர். தெள்ளமுதம் உண்டறிவார் தேவரே. மற்றையோர் அதனைக் கண்ணாலும் கண் டிலர். தேனை உண்டு சுவை கண்டறியார் யாவர்?

மலைவளமுடைய தென்னாட்டில் தேனுக்குக் குறை வில்லை. குற்றாலத் திரிகூட மலையில் தேனருவி வானருவியாகப் பாய்ந்து வழிகிறது. அதன் அழகை நாள்தோறும் கண்டுவந்த கவிஞராகிய திரிகூடராசப் பர்,

“தேனருவி திரையெழும்பி
வானின்வழி யொழுகும்
செங்கதிரோன் பரிக்காலும்
தேர்க்காலும் வழுகும்”

என்று தித்திக்கப் பாடினார். தேனாறும் நெய்யாறும் பாலாறும் பாய்ந்தோடுவது நம் பழந்தமிழ் நாட்டில் தானே!

தேன் சிறந்ததொரு மருந்து. அதனை அருந்தினர் உடற்பிணி அகலப்பெறுவர்; பேசும் குரலில் பேரினிமை பெறுவர்; அவரது உடலில் தனியொளி மிளிரும். இத்தகைய தேனை மலர்களிலிருந்து துளித் துளியாகத் தேனீக்கள் சேர்க்கின்றன. அதனை எவருக்கும் எட்டாத—ஏறிக்கிட்டாத இடத்தில் கொண்டுதான் கூடு கட்டி வைக்கின்றன. என்றாலும்

மலை வாழும் வேட்டுவரும், மரம் ஏறும் திறமுடை யாரும் அதனைக் கவர்ந்து செல்கின்றனர். தேடிச் சேர்த்த தேனீக்குச் சிறிதும் பயனில்லாது போகின்றது. உலகில் பொருளைத் தேடித் திரட்டுவார் ஒருவரும், அதனை நாடித் துய்ப்பார் பிறிதொருவரும் இருக்கத் தானே செய்கின்றனர்.

'நறுந்தேன் நாவொன்றிற்கு மட்டுமே இனிப்பது; நம்பனாகிய ஈசன் இணையடி மலரில் பொங்கிவரும் தேனோ நினைக்கும் நெஞ்சத்திற்கு இனிக்கும்; காணும் கண்களுக்கு இனிக்கும்; பேசும் நாவிற்கு இனிக்கும். உடம்பிலுள்ள அத்தனை எலும்புகளும் நெக்கு நெக் குருகுமாறு மிக்கு இனிக்கும். இதுவே ஆனந்தத் தேன்! அருள் தேன்! இவ் ஒப்பிலா நறுந்தேனை அருந்த விரும் புங்கள்! தினையளவு தேனளிக்கும் பூவில் வாய்வலிக்க ஊதாதீர்கள்! ஈசன் பாத கமலங்களில் சென்று இன் னிசை பாடுங்கள்! அங்குப் பொங்கித் ததும்பி வரும் ஆனந்தத்தேனை அருந்துங்கள்! என்று அரச வண்டுக்கு அறிவுரை கூறுகின்றார் மாணிக்க வாசகர்.

'தினைத்தனை உள்ளதோர்
பூவினில் தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும்
பேசுந்தொறும் எப்போதும்

அனைத்தெலும்(பு) உண்ணெக
'ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே
சென்(று)ஊதாய்! கோத்தும்பீ!

என்பது அவர்தம் மணிமொழி.

மணிவாசகர் இறைவனையே 'தேனாய் இன்னமுதாய்த் தித்திக்கும் சிவபெருமான்' என்று உளங் கனிந்து பாடியவர். அவர் பாடியருளிய தேனூறு வாசகங்கள் அறுநூறும் 'தமிழ்த்தேன்' என்றே தலைக்கொண்டு போற்றும் தனிமாண்புடையன. 'திருவாசகம் என்னும் தேன்' என்றே பாராட்டினார் ஒருவர். திருவிடை மருதூரில் மருதிடை யமர்ந்த பெருமானை மாணிக்கவாசகர் 'ஆனந்தத்தேன்' என்றே குறித்தருளினார். 'அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த பொந்தைப் பரவி நாம் பூவல்லி கொய்யாமோ' என்று பாடியருளினார்.

மருதிடை உறைந்த பெருமானாகிய ஆனந்தத் தேனை அகங் குளிர வழிபட்ட தமிழ் வேந்தராகிய நாவுக்கரசர், 'கனியினும் கரும்பினும் காரிகையாரினும் தனி முடி அணிந்தாளும் அரசினும் இனியன் அவ் இடை மருதீசன்' என்று கூறி இன்புற்றார்.

நெல்லை நாட்டின் தெய்வக்கவிஞராகிய குமரகுருபர அடிகளார், தில்லைப் பொன்னம்பலத் திருக்கூத்தனைத் தரிசித்தார். அப்பெருமான் ஆடல் புரியும் பொன்னம்பலம் பொற்றாமரைபோல அவர் விழிகட்கு விளங்கிற்று. அதன்கண் ஆனந்தக் கூத்தாடும் பெருமான் திருமேனி ஆனந்தத் தேனாகத் திகழ்ந்தது. அருகில் நின்று பெருமானது பேரழகைப் பருகி நிற்கும் திருவாட்டி சிவகாமியன்னையின் கருவிழிகள், அத்தேனை உண்டு களிக்கும் களிவண்டுகளாகக் காட்சியளித்தன. தாமும் அவ் அருள்தேனை ஆரப் பருகினார் அடிகளார். அவரது உள்ளத் தாமரையில் கவிதைத்தேன் ஊறியது. அதனை உலகினர்க்கு உவந்து வழங்கினார்.

**'பொன்மன்றம் பொற்றாமரையொக்கும் அம்மன்றில்**
**செம்மல் திருமேனி தேனொக்கும் அத்தேனை**

உண்டு களிக்கும் களிவண்டை ஒக்குமே
எம்பெரு மாட்டி விழி'

என்பது அத் தெய்வக் கவிஞர் தேன்மொழி.

இங்ஙனம் மணிவாசகர், நாவுக்கரசர், குமரகுரு பரர் போன்ற நல்லடியார்க்கு ஆனந்தத் தேனாய்த் தித்தித்த ஆண்டவன், அருட்பிரகாசராகிய வள்ளலார் பெருமானுடைய உள்ளத்திற்கு எப்படி இருந்திருப்பான்! அருளே உருவாக விளங்கிய அவர் அவ்ஆனந்தத் தேனை எப்படிப் பருகியிருப்பார்!

ஐந்து மாதக் குழந்தையாக இருக்கும் போதே பொன்னம்பலக் கூத்தன் பொற்புடைய திருக்கோலம் கண்டு புன்முறுவல் பூத்த பெருமானல்லவா நம் அருள் வள்ளலார்! அன்றே அவர் உள்ளம் குடிகொண்ட அம்பலத்தரசன் ஆரமுதாய் என்றும் அவர்க்குத் தித்தித்தான். ஆனந்தத் தேனாய் என்றும் அவர்க்கு இன்பத்தை அள்ளியள்ளி வழங்கினான். அந்த அருள் இன்பப் பெருங்கடலுள் மூழ்கித் திளைத்த இராமலிங்க அடிகளார் கைகொட்டிக் கால்பெயர்த்து ஆனந்தக் கூத்தாடத் தொடங்கினார். ஆடினார்! பாடினார்! ஆடிக்கொண்டே பாடினார்!

'அம்பலத் தரசே! அருமருந்தே!
ஆனந்தத் தேனே! அருள்விருந்தே!
பொதுநடத் தரசே! புண்ணியனே!
புலவ ரெலாம்புகழ் கண்ணியனே!

பாட்டைப் பாடிப் பாருங்கள்? நாமும் நம்மை அறியாமல் ஆடத் தொடங்கி விடுவோம்.

## ௬. நால்வர் செய்த நற்றமிழ்

நான்கு என்னும் எண், நன்மையான ஒன்றைக் குறிக்கும் உயர்வுடையது. அது நன்மை யென்ற பண்பின் அடியாகப் பிறந்ததோ என்று எண்ணுமாறு சிறந்து விளங்குவது. 'நான்கு' என்ற சொல்லின் நீட்டல் விகாரமாகத் தோற்றமளிப்பது அதற்கோர் ஏற்றமாகும். 'நான்கு தூண்கள் சேர்ந்தால்தானே ஒரு பந்தல்! நாலுபேர் கூடினுல் தானே ஒரு நல்ல காரியம் முடியும்! எதற்கும் நான்கையும் எண்ணிப் பார்க்க வேண்டாமா?' என்பன போன்ற பழமொழிகள் நான்கு என்ற எண்ணின் சிறப்பைப் புலப்படுத்துவனவாகும்.

'சமய உலகில் நால்வர்' என்று சொன்னுல் சைவ சமயாசாரியர் நால்வராகிய சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைக் குறிக்கும் என்பதை எவரும் அறிவர். தமிழகத்தின் தொன்மையான சமயம் சைவமே. சிவம் என்னும் சொல், அன்பாகிய உயர்ந்த பண்பைக் குறிக்கும். 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்', என்பது மூலமந்திரம். அன்பு வடிவாக இறைவனைக் கண்டு வணங்கியவர் நம் முன்னேர். ஆதலின் சிவநெறியாவது அன்பு நெறியே. பிற சமயங்களை யெல்லாம் தன்னுள் அடக்கிக் கொள்ளும் பேராற்றல் அன்புச் சமயமாகிய சைவம் ஒன்றற்கே உண்டு. அன்பில் அடங்காத பண்பே இல்லையன்றே!

பழமையும் பெருமையும் வாய்ந்த அன்புச் சைவத்திற்கும் இடையிடையே பலர் அழிவை விளைத்தனர். அந்தக் காலங்களில் எல்லாம் இறைவன் திரு

வருளால் நிறைமொழியாளர் பலர் தோன்றிச் சைவத்தைக் காத்தனர். அவர்கள் தம் பாவன்மை நாவன்மைகளால் சிவநெறியின் சிறப்புக்களை மக்களிடையே பரப்பி நிலைநாட்டினர். அங்ஙனம் சைவத்தைக் காத்தற்கென்றே தோன்றியருளிய தெய்வப் பெரியார்களில் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர் சமயாசாரியர் நால்வருமாவர். இவர்கள் உலகில்

**'வந்திலரேல் நீறெங்கே? மாமறைநூல் தான்எங்கே?**
**எந்தைபிரான் ஐந்தெழுத்(து) எங்கே?'**

என்று வினவினார் ஒரு சமயப் பேரறிஞர்.

அத்தகைய திருவருள் நலஞ்சான்ற வித்தகர் நால்வருள் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் தேவாரப் பாக்களால் தெருவெல்லாம் சிவமணம் கமழச் செய்தனர். சம்பந்தரும் அப்பரும் ஒரே காலத்தில் இருந்து சிறந்த சிவப்பணியாற்றிய தவப்பெருஞ் செல்வர்கள். அவர்கள் இருவரும் பற்பல சிவத்தலங்களுக்கு எழுந்தருளி இறைவனைப் போற்றிப் பொற்புடைய பதிகங்களைப் பாடினர். இவர்களுடன் திருநீலகண்ட யாழ்ப்பாணர் என்னும் யாழிசை வல்லாரும் அவர் மனைவியாராகிய கூத்தில் வல்ல மதங்கசூளாமணியாரும் சென்று சிவப்பணிக்குத் துணைபுரிந்தனர். சம்பந்தரும் அப்பரும் பாடியருளிய பாமாலைகளையெல்லாம் பாணர் யாழில் பண்ணமைய இசைத்துக் கேட்பவர் உள்ளம் கிளர்ச்சி கொள்ளச் செய்தனர். அப்பாடல்களின் கருத்துக்களைப் பாமரரும் உணர்ந்து இன்புறும் வண்ணம் மதங்கசூளாமணியார் அவிநயம் பிடித்து நாட்டியமாடிக் காட்டினார். இவ்வாறு சம்பந்தரும் திருநீலகண்ட யாழ்ப்பாணரும் மதங்கசூளாமணியாரும் முறையே இயல், இசை, நாடகமாகிய முத்

தமிழைத் துணையாகக் கொண்டு, இணையிலாச் சிவ நெறியைப் பரப்பிய சிறப்புடையராவர். இத்தகைய தேவார இசைக் குழுவொன்று தெருவில் பண்ணிசைத்து வருமாயின் எண்ணில்லாத மக்கள் திரண்டு நின்று காண்பதும் கேட்பதும் கருத்தைச் செலுத்துவதும் இயற்கையன்றோ!

சுந்தரர் தோன்றிய காலத்திலும் தமிழகத்தில் சமண் நெறி பரவத் தலைப்பட்டது. முள் மரத்தை இளைதாக இருக்கும்போதே கிள்ளியெறிதல் போன்று அத் தீநெறி தலைதூக்காதவாறு தடுத்து நிறுத்துதற்கென்றே சுந்தரர் தோன்றியருளினார்.

'மாதவம் செய்த தென்றிசை வாழவும்
தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரவும்'

பிறந்தருளிய பெருமானார் வைதிகத் திருவும் மன்னவர் திருவும் பொங்கச் சிறந்து விளங்கினார். முன்னை நல்வினையால் இன்னருள் ஈசனையே சிறந்த நேசனாகப் பெற்றுத் தம்பிரான் தோழரெனத் தலைசிறந்து விளங்கினார். அவரும் பற்பல அற்புதங்களை இறையருள் துணையால் இயற்றிச் சிவநெறியை நிலைநாட்டினார். இம்மூவர் முதலிகளும் பாடிய தேவாரப் பதிகங்களே 'மூவர் தமிழ்' என்று போற்றப் பெறுவனவாகும்.

பாண்டிய மன்னனுக்கு மதியமைச்சராய் விளங்கித் திருவருள் ஞானநெறி நின்ற மாணிக்கவாசகர் விலை மதிக்க முடியாத மாணிக்கம் போன்ற மாணுற்ற பாக்கள் ஆயிரத்தைப் பாடியருளினார். தேனூறு வாசகங்கள் அறுநூறும், திருக்கோவை நானூறும் தந்தருளிய நாயகராகிய மணிமொழியாரின் கனிமொழியனைத்தும் சைவ சித்தாந்த சாரமான தேனைக்

கற்பவர் உள்ளமெல்லாம் தித்திக்க அள்ளூறும் தெள்ளமுதமாகத் திகழ்கின்றன: இவரது திருவாசகத் தேனுடன் மூவர் தமிழாகிய தேவாரப் பாகும் சேர்ந்தே நால்வர் செய்த நற்றமிழாயிற்று.

சைவம் காக்க வந்த தெய்வக் கவிஞர்களாகிய இந் நால்வர் செய்த நற்றமிழினை இசைவல்ல நல்லறிஞர் ஒருவர் யாழொலி, குழலொலி முதலாய பல வகை வாத்தியங்கள் கலந்து முழங்கப் பண்ணுடன் குழைத்துப் பரவசமாகப் பாடிக்கொண்டிருந்தார். இந்த இசைக்குழுவின் இன்னிசை முழக்கில் எண்ணில்லாத மக்கள் மனத்தைப் பறிகொடுத்து இன்பவெள்ளத்தில் ஆழ்ந்திருந்தனர்.

இந்தக் காட்சியினை அப்பக்கமாக வந்த அருட்பிரகாச வள்ளலார் கண்ணுற்றார். திடீரென்று அக் கூட்டத்திலிருந்து பெண்ணொருத்தி எழுந்தாள். அவள் தன் கணவன் இருந்த பக்கத்தை நோக்கினாள். அவனும் தற்செயலாக அவள் இருந்த பக்கத்தைப் பார்த்தவன் அவள் எழுந்து நிற்பதையும் தெரிந்துகொண்டான். அவள் கண்சாடை காட்டிப் 'புறப்படு' என்றாள். அவனுக்கோ அந்த இடத்திலிருந்து எழுந்திருக்கவே மனமில்லை. அவளோ, "நீ இப்போது என்னுடன் வரவில்லையென்றால் உனக்கு உணவு கிடையாது; கதவைத் தாழிட்டு வீட்டுள் படுத்துக்கொள்வேன்; பின்பு நீ பசியுடன் வந்து வெளித்திண்ணையில்தான் படுத்துக் கிடக்கவேண்டும்" என்று குறிப்பாக அறிவித்தாள். அவள் சினத்திற்கு ஆளாக அஞ்சிய அவ் ஆண்மகன் மெல்ல எழுந்து நடந்தான். ஆனால் அவனது உள்ளம், நால்வர் செய்த நற்றமிழைக்

கேட்டு உருகி நின்றது. அஃது அவ்விடத்தைவிட்டு நீங்கவே இல்லை. வீட்டிற்குப் புறப்பட்ட அவன் கால்கள் நடக்க மறுக்கின்றன. திரும்பித் திரும்பி இசைக் குழலை விரும்பி நோக்கியவாறே மெல்லென நடந்து மனைவியைத் தொடர்ந்தான்.

இவ்வாறு கணவன் மனைவியரிடையே நிகழ்ந்த நிகழ்ச்சியைச் சிறிது கவனித்தார் அருட்பிரகாச வள்ளலார். உடனே அப்பெருமானது திருவுள்ளத்தில் அமுத மயமான கவிதையொன்று ஊற்றெடுத்து வெளிவந்தது. அந்தக் கவியமுதினை நாவாலும் நன்னெஞ்சாலும் ஓதியுணர்ந்து பருகிப் பாருங்கள்! நால்வர் செய்த நற்றமிழினைத் தேருங்கள்! அதனை நாள்தோறும் ஓதி யின்புறுங்கள்!

சேல்வரும் கண்ணி யிடத்தோய்நின்
சீர்த்தியைச் சேர்த்தியந்த
'நால்வரும் செய்தமிழ்' கேட்டுப்
புறத்தில் நடக்கச்சற்றே
கால்வரு மாயினும் இன்புரு
வாகிக் கனிமனம்அப்
பால்வரு மோ? அதன் பாற்பெண்
களைவிட்டுப் பார்க்கினுமே.

# எ. கரை ஏற வழி

தாயின் வயிற்றிலிருந்து குழந்தை தரையில் விழுந்ததுமே குவா! குவா! என்று கத்தத் தொடங்கி விடுகிறது. அங்ஙனம் அழவில்லையானால் அந்தக் குழந்தைக்கு இந்த உலகில் வாழ்வில்லை. ஆகவே உலகிற் பிறந்தார் அனைவரும் துன்பத்தால் உழலவே பிறந்தனர். ஐயோ! இத்துன்பக் கடலில் வீழ்ந்து விட்டோமே! இனி என்று கரையேறப் போகிறோம்?' என்றுதான் பிறந்த குழந்தையும் கதறி அழுகின்றது.

தெய்வப் புலவராகிய திருவள்ளுவர், 'பிறவியே பெருங்கடல்; அதனை நீந்திக் கடந்து கரையேற இறைவன் திருவடியே தெப்பமாகத் துணைசெய்யும்; அதனைப் பற்றுக்கோடாகப் பற்றாதவர் இப்பிறவிக்கடலினின்று கரையேறவே முடியாது கலங்குவர்' என்று கட்டுரைப்பார்.

> 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர், நீந்தார்
> இறைவன் அடிசேரா தார்?'

என்பது அவர் வாய்மொழியாகும். இங்ஙனமே இறையருள் வெள்ளத்தில் திளைத்த அடியார்கள் அனைவரும் 'பிறவிக் கடலைத் தாண்டப் பெரும்புணையாகத் துணை செய்வது இறைவன் இணையடியே' என்றும் வழிகாட்டியருளினர்.

> 'மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருப்
> பாத மேமனம் பாவித்தேன்'

என்று பாடியருளினார் சுந்தரர்.

சைவ சமயக்குரவருள் ஒருவரும் எண்பத்தோராண்டுகள் பண்பட்ட சமய வாழ்வு நடத்திய பெருமானும் ஆகிய நாவுக்கரசர் பல சமய சாத்திரங்களையும் கற்றுத் தேர்ந்த கலைவாணராக விளங்கினர். ஏதோ ஊழ்வினைப் பயனால் அவரது உள்ளம் சமண் சமயத்தில் சிறிது சார்ந்தது. அதனால் சமணம் புகுந்து அச்சமய சாத்திரங்களில் வல்லாராய்ச் சமணர் தலைக்கொண்டு போற்றும் நல்லாராய்த் திகழ்ந்தார். அப்போது இருந்த பல்லவ மன்னனாகிய மகேந்திரவர்மன், நாவுக்கரசரை வரவழைத்துத் தருமசேனர் என்று பட்டம் சூட்டி அவரைச் சமண் சமய குருவாகவே மதித்துக் கொண்டாடினன்.

வாழையடி வாழையாக வரும் சைவ மரபில் தோன்றிய நாவுக்கரசர் சமண் புகுந்தது கண்டு வருந்திய,அவர் தமக்கையாராகிய திலகவதியார் திருவதிகை வீரட்டானத்திலுள்ள திருக்கோவிலை அடைந்து, பெருமானை வழிபட்டு முறையிட்டார். 'பெருமானே! என் தம்பி, சைவம் தழைக்க வாழ வேண்டும் என்பதற்காகவே அடியாள் உயிர் வாழ்ந்தேன்; அவன் சமண் புகுந்து விட்டான்; அவனை மீண்டும் சைவம் புகுமாறு செய்தருள வேண்டும்' என்று அல்லும் பகலும் ஆண்டவனை வேண்டி அவ் அம்மையார் பாடுகிடந்தார்.

இங்ஙனம் நாவுக்கரசர் பரசமயப் படுகுழியினின்று கரையேற வழிவகுத்தருள வேண்டுமென வரங்கிடந்த திலகவதியாருக்குப் பெருமான் திருவருள் சுரந்தான். அதன் பயனாக நாவுக்கரசரைக் கொடிய சூலைநோய் வருத்தத் தொடங்கியது. சமண் சமய வல்லார்கள் பலர் அப்பிணியைத் தீர்க்கப் பெருமுயற்சி எடுத்துக்

கொண்டனர். எனினும் நோய் அகலவில்லை. இறுதியில், அவர் தமக்கையார் பாதங்களில் வந்து விழுந்து பணிந்தார். திருவாளன் திருநீற்றைத் திலகவதியார் அளிப்பத் திருநாவுக்கரசர் பெருவாழ்வு வந்ததெனப் பணிந்தேற்று நெற்றியில் அணிந்தார். கற்றைச் சடைப் பெம்மானை உள்ளங் கனிந்து தெள்ளிய தமிழ்ப்பாக்களால் துதிக்கத் தொடங்கினர். அவர் பத்துப் பாடல்கள் கொண்ட பதிகம் பாடி முடிப்பதற்குள் சூலை நோய் மாயமாய் மறைந்தது. அதனைக் கண்ட நாவுக்கரசர், "பெருமானே! இனி யான்,

'சலம்பூ வொடுதூ பம்மறந் தறியேன்
தமிழோ(டு) இசைபா டல்மறந் தறியேன்
நலம்தீங் கிலும்உன் னைமறந் தறியேன்
உன்நா மம்என்நா வில்மறந் தறியேன்'

என்று உறுதி மொழி உரைத்தார்.

நாவுக்கரசர் சைவம் சார்ந்தது கண்ட சமணர்கள், தங்கள் மன்னனாகிய மகேந்திரவர்மப் பல்லவனிடம் சென்று செய்தியைச் சொல்லினர். அவரை அழிப்பதற்குப் பல சூழ்ச்சிகள் செய்தனர். அவற்றையெல்லாம் நாவுக்கரசர் திருத்தொண்டின் உறைப்பால் வென்று வீறுகொண்டு விளங்கினர். இறுதியில் அவரைக் கல்லோடு சேர்த்துக் கட்டிக் கடலில் கொண்டு தள்ளினர்.

'கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே'

என்று ஐந்தெழுத்து மந்திரத்தைச் சிந்தையால் நினைந்தும் செந்நாவால் ஓதியும், அதுவே துணையாகக் கல்லும் மிதக்குமாறு செய்து கரையேறினர்.

இத்தகைய ஐந்தெழுத்து மந்திரத்தின் அரிய ஆற்றலைப்போற்ற வந்த சேக்கிழார் பெருமான், "இருவினைப் பாசத்தால் மும்மலக் கல்லோடு சேர்த்துக் கட்டிப் பிறவிக் கடலில் தள்ளப்பட்ட மக்களையெல்லாம் பேரின்பக் கரையில் ஏற்றுவிக்கும் ஆற்றலை யுடையதன்றோ அஞ்செழுத்து! அத்தகைய பேராற்றலையுடைய சீரிய மந்திரம், சாதாரணமான கடலினின்று ஒரு கல்லோடு கட்டப்பெற்ற நாவுக்கரசரைக் கரையேற்றுதல் என்பது அரிய காரியமோ?" என்று கேட்டருளினார்.

**'இருவினைப் பாசமும் மலக்கல் ஆர்த்தலின்**
**வருபவக் கடலில்வீழ் மாக்கள் ஏறிட**
**அருளுமெய் அஞ்செழுத்(து) அரசை இக்கடல்**
**ஒருகல்மேல் ஏற்றிடல் உரைக்க வேண்டுமோ?'**

என்பது சேக்கிழார் பெருமானின் தெய்வ மணக்கும் செய்யுளாகும்.

நாவுக்கரசர் பெருமானை நினைவுற்றுத் தம் நெஞ்சைப் பறிகொடுத்த செஞ்சொற் கவிஞராகிய வள்ளலார் பெருமான், தில்லைக் கூத்தரசனை நோக்கித் தம்மைக் கரையேற்றுமாறு உள்ளம் கரைந்துருகி வேண்டுகின்றார்.

'ஆடலரசே! இச் சிறியேன் திருநாவுக்கரசரைப் போல, ஒரு கல்லோடு பிணைத்துக் கடலுள் தள்ளப் பட்டுள்ளேன். மாயையாகிய சமணால் மனமாகிய கருங் கல்லோடு கட்டப்பட்டேன். உலகிலுள்ள பாவக்கடலுள் வீழ்த்தப்பட்டு வெந்துயரம் அடைகின்றேன். அக்கடலினின்று கரையேறுவதற்கு ஐந்தெழுத்து மந்திரத்தையே புணையாகக் கொண்டுள்ளேன். எளியேன்

னைக் கரையேற்றிக் கருணைபுரிவாய்!' என்று அம்பலக் கூத்தனை அடிபணிந்து வேண்டுகின்றார்.

'சீர்தரு நாவுக் கரையரைப்
போல் இச் சிறிய னும்ஓர்
கார்தரு மாயைச் சமணால்
மனக்கருங் கல்லிற் கட்டிப்
பார்தரு பாவக் கடலிடை
வீழ்த்திடப் பட்டு ழன்றே
ஏர்தரும் ஐந்தெழுத்(து) ஓதுகின்
றேன் கரை யேற்(று) அரசே!'

என்பது வள்ளலாரின் உள்ளுருக்கும் தெள்ளமுதத் திருவருட்பாவாகும். இதனால் அருள்வள்ளலார், இறைவன் திருநாமம் ஒன்றே பிறவிக்கடலினின்று கரையேறப் பெருந்துணை செய்வது என்பதை நன்கு வலியுறுத்தியுள்ளார்.

---

## அ. தணிகைக் காதல்

குன்றுதோறாடும் குமரவேளுக்குத் திருத்தணிகைப் பெருமலையும் ஓர் உறைவிடமாகும். சூரன் குலத்தை வேருடன் அறுத்த வீரனாகிய வேலன் தனது வெஞ்சினம் தணிந்து வீற்றிருந்த இடமாதலின் அம்மலை தணிகைமலை என்னும் தனிப்பெயர் தாங்கியது. அணிவேல் தாங்கிய அத் தணிகை முருகன்மீது அருட்பிரகாச வள்ளலார் தணியாத காதல் கொண்டார். அப் பெருமானைத் தரிசித்து மகிழப் பெருங்காதல் கொண்டார்.

அவர் தம் இளமைப் பருவத்தில் நிலைக்கண்ணாடியில் அத் தணிகை முருகனைக் காண்டற்குப் பன்னாட்களாக அகங்குழைந்து வேண்டினார். ஒரு நாள் பெருமானது காட்சி அவருக்குக் கிடைத்துவிட்டது. அவனது சீர்கொண்ட வதனங்கள் ஆறனையும் கண்டு களித்தார்; கடப்பந் தார் கொண்ட பன்னிரு தோள்களையும் பார்த்து மகிழ்ந்தார்; அவனது தாமரைத் தாள்களைத் தரிசித்து இன்புற்றார்; அவன் திருக்கரம் ஏந்திய கூர்வேலையும் கோழிக் கொடியையும் கூர்ந்து நோக்கினார்; அவனது அருளைப்போன்று கார்மேகங்கள் சூழ்ந்து விளங்கும் தணிகைமலையையும் கண்ணுற்றார்.

இங்ஙனம் தணிகைப் பெருமானது தண்ணருள் காட்சியைக் கண்டு தரிசித்த கருணைப் பெருமானாகிய இராமலிங்கர், "பெருமானே! உன் திருக்கோலம் காணும் காதலால் எத்தனை நாட்களாக ஏங்கிக் கதறுகிறேன். இத்தனை காலமாக ஏழையேனுக்கு இரங்காது காலத்தாழ்வு செய்ததன் காரணம் என்னவோ? நீயோ பல்வேறு காதலையும் நீக்கிய நல்லோர்க்கு அருளும் பரம்பொருள். அடியேனோ ஒரு காதலையும் உணராத சிறுவன். இவ் எளியேன் ஈரமில்லாத ஈனர்பால் சென்று இரந்து இழிவெய்துமாறு விட்டு விடாதே!" என்று பலவாறு வேண்டிப் பாடினார்.

ஒருகால் தாம் கண்ணுற்ற அப்புண்ணியக் காட்சியை மீண்டும் காட்டியருள வேண்டும் என்று பலகால் பரவி வேண்டுகின்றார். முருகனோ அழகே உருவாகத் திரண்ட பெருமான்; என்றும் இளமை குன்றாத எழிலுடன் இலங்கும் திருமேனியுடையான். அவனுடைய அழகிற்கு உவமை சொல்ல எவராலும்

முடியாது. சூரனை வெல்லுதற்குப் போர்க்கோலம் தாங்கி வந்த அப் புனிதனைப் பாலன் என்று பழித்து வந்த அச்சூரன், அவனது திருக்கோலத்தை நேரிற் கண்டவுடன் நெஞ்சம் உருகி நின்றான். இக்குமர வேளை முன்னெல்லாம் ஏதும் அறியாத சிறுவன் என்றல்லவா எண்ணி எள்ளி நகையாடினேன். இன்று தான் அவனைக் காணும் பேறு பெற்றேன். இதுவரை அவன் பரிசை உணராது போய்விட்டேனே! இவன்,

'மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற
மூர்த்திஇம் மூர்த்தி யன்றோ !'

என்று வியந்து புகழ்ந்தான். 'ஆயிரங்கோடி மன்மதரின் அழகெல்லாம் திரண்டு ஓர் உருக்கொண்டாலும் இச் செவ்வேளின் சேவடி எழிலுக்கு இணையாக முடியாதே! அப்படியானால் அவனது மாயிரு வடிவுக்கெல்லாம் யார் உவமை வகுக்க வல்லவர்?' என்று பாராட்டினான்.

இங்ஙனம் பகைவனாகிய சூரனும் வியந்து போற்றும் வேலனாகிய மேலோனது பாதமலரையாவது திரும்பவும் பார்க்க வேண்டுமென்று விரும்பினார் அருட்பிரகாச வள்ளலார். அத்திருவடிகளைக் காட்டியருளுமாறு கசிந்துருகி வேண்டினார்.

'தணிகை ஒளிரும் மணியே! பண்ணமைந்த பாடல் அடியார்கள் இடையறாது பரவி வாழ்த்தும் பெருமையுடையது உன் பாத மலர். அதன் அழகு அளப்பரியது. அதனை இப்பாவியேன் பார்க்கலாகாதா? அடியேன் பார்த்துவிட்டால் கண்ணேறு

டாட்டுவிடுமா? கனவிலேனும் காட்டியருள் என்று வேண்டுகிறேன். நீயோ அதனைக் காட்டுகின்றாயில்லை. இதுதானோ உன் கருணை? விண்ணவர்க்கு அரியனாகிய நீ, மண்ணவர்க்கும் நின் புகழ்பாடும் புண்ணியர்க்கும் எளியன் என்றல்லவா எல்லோரும் சொல்லுகின்றனர். வீட்டுலகின் வித்தாய், ஞான விளக்காய், கண்மணியாய் விளங்கும் தணிகை மணியே! நின் பாதமலரைக் காண விழையும் எளியேனுடைய காதலைத் தணித்தருள்வாய்!' என்று உளமுருகிப் பாடும் இராமலிங்கரது அருட்பா, கற்பவர் கேட்பவர்களின் இதயத்தைத் தொடுவதாகும்.

'பண்ணேறு மொழியடியர் பரவி வாழ்த்தும்
பாதமலர் அழகினைஇப் பாவி பார்க்கில்
கண்ணேறு படுமென்றோ கனவி லேனும்
காட்டென்றால் காட்டுகிலாய் கருணை யீதோ?
விண்ணேறும் அரிமுதலோர்க்(கு) அரிய ஞான
விளக்கே! என் கண்ணே! மெய் வீட்டின் வித்தே!
தண்ணேறு பொழில்தணிகை மணியே! சீவ
சாட்சியாய் நிறைந்தருளும் சகச வாழ்வே!'

இவ் அருட்பாவில் இராமலிங்க அடிகளார் அழகியதொரு தமிழ்ச்சொல்லை எடுத்தாண்டுள்ளார். நம் பழக்கத்தில் 'கண்திருஷ்டி' என்றொரு சொல் வழங்கி வருகிறது. அதனைக் 'கண்திருட்டு' என்பர் சிலர். வேறு சிலர் அதனைக் 'கண்ணூறு' என்பர். இவ்விதமெல்லாம் வழங்கும் சொற்களின் கருத்தை நன்கு புலப்படுத்தும் 'கண்ணேறு' என்ற சொல்லை அவர் வழங்கிக் காட்டுகிறார்.

பொறுமை யுள்ளம் கொண்ட பொல்லாத புல்லர் களின் தீய பார்வை பெருந்தீங்கை விளைப்பதைப் பார்க்கிறோம். அதனாலேயே ஒரு புலவர், 'தீங்கினர் தம் கண்ணில் தெரியாத தூரத்தே நீங்குவதே நல்ல நெறி' என்று சொல்லி வைத்தார். தீயர்களின் கட்பார்வை பிறர்மீது படுவதை 'ஏறுவது' என்று குறிப்பிடும் கருத்து, முள்ளேறுவதும் நஞ்சேறுவதும் போன்ற கொடுமையுடையது என்பதை வலியுறுத்தும் நோக்காலாகும். பத்திச் சுவை நனிசொட்டச் சொட்ட அருட்பா அமுதைச் சொரியும் அருட்கொண்டலாகிய வள்ளலார் பெருமான் செந்தமிழ்ப் புலவர்க்கு விருந் தாகவும் ஆங்காங்கே பாங்கான பழந்தமிழ்ச் சொற் களாகிய மணிகளைப் பதித்து வைத்துள்ளார்.

---

## கக. தாயனையான்

'பெற்றவளுக்குத் தெரியும் பிள்ளையருமை" என் பது கல்லாரும் கற்றவரும் சொல்லும் நல்லதொரு பழமொழி. இது தாயின் தலையாய அன்பை இனிது புலப்படுத்துகிறதன்றோ! பொல்லாத பிள்ளையாக இருந் தாலும், தாய் அப்பிள்ளையை வெறுத்துத் தள்ளுவ தில்லை. அதனைப் பிறர் பொல்லாத பிள்ளையென்று சொல்லவும் எள்ளளவும் பொறுப்பதில்லை.

'பொல்லாத சேய் எனினும் தாய்தள்ளல் நீதமோ ?
புகலிடம் பிறிதும் உண்டோ ?'

என்று கேட்பார் தாயுமானவர்.

தடித்த பிள்ளையைப் பிடித்துத் தந்தை சினத்து டன் அடிப்பானாயின் அதனை உணர்ந்த தாய் உடனே

ஓடோடி வந்து, அடியாமல் தடுத்து நிறுத்துவாள். ஒரு கால் அத்தாயே சிந்தை நொந்து அப்பிள்ளையை அடிப்பாளாயின் அதனை அறிந்த தந்தையோ, உடன் ஓடி வந்து தடுப்பன். இஃது உலக இயற்கையாக இருக்கிறது. இதனை நன்கு அனுபவத்திற் கண்ட அருட்பிரகாச வள்ளலார்,

'தடித்தஓர் மகனைத் தந்தையீண்(டு) அடித்தால்
தாய்உடன் அணைப்பள்; தாய் அடித்தால்
பிடித்தொரு தந்தை அணைப்பன்'

என்று குறித்தருளினர்.

குழந்தையைப் பெறுகின்ற தாய், முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாள் சுமந்து, அந்தி பகலாகச் சிவனை ஆதரித்துத், தொந்தி சரியத் தொல்லைகள் பல தாங்கிப் பெற்றெடுக்கின்றுள். அங்ஙனம் அருமையாகப் பெற்றெடுத்தபிள்ளை, பெண்ணுக இருந்துவிட்டால் அவள் வேதனை, நீங்காத வேதனையாகவே நெஞ்சை வருத்துகிறது. அப்பிள்ளை ஆணுக இருந்துவிட்டாலோ அவள் அடைந்த வேதனை அத்தனையும் அந்தக் கணத்திலேயே காற்றுய்ப் பறந்து விடுகிறது. தாயின் வேதனை யெல்லாம் தணியுமாறு பிறந்த ஆண் குழந்தை வளர்ந்து கலை பயின்று சிறந்த சான்றேருகத் திகழ, அவனைக் கற்றவரும் மற்றவரும் புகழ, அப் புகழ் மொழிகளைக் காதாரக் கேட்ட தாய், அவனைப் பெற்ற பொழுது உற்ற உவகையைக் காட்டிலும் அளவற்ற உவகை யடைவாள். இதனைத் தமிழ் மூதாட்டியாராகிய ஔவையார்,

'சான்றேன் என்கை ஈன்றோர்க்கு அழகு'

என்ற ஒரு சிறு தொடரால் அருமையாக விளக்கினர். தெய்வப்புலவராகிய திருவள்ளுவர் இதே கருத்தை,

'ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்'

என்று ஈரடிப் பாவால் சீருற விளக்கியருளினார்.

தாய் ஒருத்தி, தான் பெற்ற பிள்ளையைப் பதினாறு நாள்வரையிலும் பக்கம் விட்டகலாது மிக்க கருத்துடன் பேணுகிறாள். அதன் பின்னர், அதனைத் தொட்டிலிலிட்டு உறங்கச் செய்து, சிறிது பொழுதுக்கு ஒரு முறை மறவாது பாலூட்டித் தாலாட்டி வளர்க்கிறாள். குழந்தை வளர வளரத் தாய் சிறிது சிறிதாக அதிக நேரம் அதனைப் பிரிந்தும் பொருந்தியும் பேணி வருகிறாள். ஐந்து வயதுப் பையனாகிக் கலை பயிலுதற்குப் பள்ளி செல்லும் நாளில், அவன் பள்ளியினின்று திரும்பும்வரை ஓரளவு நீண்ட நேரம் பிரிந்து நிற்கிறாள். அவன் வரும் நேரத்தில் அவனது பசியாற்ற உணவு சமைத்துக் கொண்டு, வழிமேல் விழிவைத்து வீட்டு வாயிலில் எதிர் நோக்கி நிற்கிறாள். இன்னும் வயது ஏற ஏற அவனை நீண்ட பொழுது பிரிந்திருந்து, பின்னர்க் கண்டு களிக்கிறாள். அவன் தக்க பருவமடைந்து வேற்றூர் சென்று கலை பயிலத் தொடங்குவானானால் அவனைப் பல திங்கள் வரையிலும், பல ஆண்டுகள் வரையிலுங்கூடப் பிரிந்து விடுகிறாள். எவ்வளவு காலம் அந்த மகனைப் பிரிந்தாலும் அவனைப் பற்றிய எண்ணம் அத் தாயின் உள்ளத்தில் என்றும் இருந்து கொண்டே இருக்கும்.

இத்தகைய ஒப்பில்லாத பேரன்புடைய தாய், பிள்ளையைப் பிரிய நேர்கிறது. ஆனால் இறைவனோ உலகத்து உயிர்களாகிய அவன் பிள்ளைகளை அணுவளவு நேரமும் பிரிந்து இருந்ததேயில்லை. அவ் உயிர்கள் செல்லும் இடமெல்லாம் உடனேயே தொடர்ந்து, விடாது

சென்று துணைபுரிந்தருளும் இணையிலா ஈசனை என்னென்று பாராட்டுவது! அவன் உயிர்களிடத்துச் செய்யும் பேரன்புக்கு உலகில் தலையாய தாயன்பைத் தவிர வேறு எதனை ஒப்பாகக் கூற முடியும்! அதனாலேயே உள்ளமும் ஊனும் உயிரும் கரைந்து உருகுமாறு திருவாசகத்தைப் பாடியருளிய மணிவாசகனார்,

'பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே! சிவபெரு மானே!
யான்உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே?'

என்று பாடியருளினார். 'தாயிற் சிறந்த தயாவான தத்துவனே' என்றும் அவனது அளவிலா அன்பை வியந்து போற்றினார்.

இத்தகைய திருவாசகத் தேனைப் பருகிப் பருகித் திளைத்த அருட்பிரகாசராகிய இராமலிங்க அடிகளார், இறைவனது அன்பிற்கு இணையிலாத தன்மையை இனிது புலப்படுத்தினார். உள்ளன்பு கொண்ட ஓராயிரம் தாயர் கூடினாலும் இறைவனாகிய தாய்க்கு ஒப்பாகார் என்று உரைத்தருளினார்.

'அன்புடைய தாயர்கள் ஓராயிரம்பேர் ஆனாலும்
அன்புடைய நின்னைப்போல் ஆவாரோ?'

என்று வியந்து புகழ்ந்தார்.

---

## ௧௦. கண்ணியில் பட்ட கலைமான்

மன்னர் குலத்திற் பிறந்த இளங்காளையர்க்கு மான் வேட்டையாடுதல் ஓர் இன்ப விளையாட்டு. இன்பப் பொழுதுபோக்கிற்காகக் காட்டகம் புகுந்து வேட்டையாட முனைந்த வீர இளைஞர்க்கு மானைக் கண்டு விட்டால் பெருமகிழ்ச்சிதான். வில்லேந்தி வேட்டையாடிய பண்டை நாளில் மானைக் கண்டதும், அவர்கள் அதன் மீது அம்பை எய்வர். குறி தப்பிவிட்டால் மானை விரட்டிக்கொண்டு அதன் பின்னரேயே ஓடிப் பற்றுதற்கு முயல்வர்.

காட்டில் வாழும் வேட்டுவரோ, தம் உணவின் பொருட்டு மானைப் பிடிக்க முயல்வர். அதற்காக வில் லேந்தி மானை விரட்டிக் கொண்டு செல்லமாட்டார். எங்கேனும் புதர் நிறைந்த ஓரிடத்தே கண்ணியை விரித்துக், கூட்டமாகத் திரண்டுவரும் மான்களைக் கண்டால் அவற்றை அக்கண்ணியின் பக்கமாகவிரட்டி வீழ்த்துவர். மருண்டோடி வந்த மான்களில் ஒன்றிரண்டு கண்ணியில் விழுந்துவிடும். கண்ணியிற் பட்ட கலைமான், தனது பிணைமானைப் பற்றி, எண்ணுத எண்ணமெல்லாம் எண்ணிப் புண்ணுய் உலைந்து புழுவாய்த் துடிக்கும். மருண்ட விழியுடன் அம்மான், கண்ணியுள் கிடந்து புரண்டு கதறும். அதனுடைய துன்பத்திற்கு ஓர் எல்லையே சொல்ல முடியாது.

மான் வேட்டையாடப் புகுந்த மன்னர் குமாரரோ மானை வளைத்துப் பிடித்து விட்டால், அதற்கு அரண்மனை வாழ்வும் அளவிலா ஆதரவும் கிடைத்துவிடும்.

மனிதர் கையில் அகப்பட்டதும் மருண்டு உழன்ற மான், பின்பு ஆதரவு பெரிதும் கிடைத்தவுடன், தன்னை வளர்க்கும் தலைவனுடன் குலவி விளையாடத் தொடங்கி விடும். அஃது இனத்தைவிட்டுப் பிரிந்தாலும் மனத்திற்கு ஒரு வகை மகிழ்ச்சியே பெற்று விளையாடுகின்றது. அதிலும், மங்கையர் ஆதரவில் வளரும் மானுக்குப் பொங்கும் மகிழ்ச்சியே. ஆனால், வேட்டுவர் கண்ணியில் விழுந்த மான் அழிந்தே தீரும். அதற்கு உய்தியே இல்லை.

மலைச்சாரலில் மான் வேட்டைக்குச் சென்ற இளங்காளையர், மானனைய மாதரார் கண்ணியில் விழுந்து மயங்குவதுமுண்டு. அம் மான்விழி மங்கையிடமே சென்று, "இங்கொரு மான் வந்ததுண்டோ?" என்று கேட்டு மறுமொழி வேட்டு மதிமயங்கி மெய்ம் மறந்து நிற்பர். அங்கு அம் மானின் கண்வலையிலும் காதல் கண்ணியிலும் சிக்குண்டு திக்குமுக்காடும் சீரிளமைச் செல்வக் குமரரைக் காணலாம். அவள் கூந்தலில் சூடியிருந்த கண்ணி மாலையே இளைஞர் உள்ளமாகிய கலைமானைப் பிடித்தற்குரிய வலையாகிவிடும். அவளது விழிகளே கூரிய அம்புகளாக அவ்விளைஞர் மார்பில் தைத்து வருத்தும். இந்த நிலையுற்ற செந்தமிழ் இளைஞன் ஒருவன் இயம்பும் இனிய மொழியைப் பாருங்கள்!

'கொலைமுழு துங்கற்ற கூரிய வாளி
குளிப்ப இன்றென்
கலைமுழு தும்பட்ட தாலொரு மான்முடிக்
கண்ணியிலே.'

அந்த இளைஞன் பல்கலைச் செல்வன்; பருத்துயர்ந்த பெருந்தோளான்; சிறந்த வீரன். அன்னான், தான்

பெற்ற கலையறிவெல்லாம் அம் மானனைய மாதர் நல்லாள் கூந்தலில் முடித்த கோதைக் கண்ணியில் சிக்குண்டு நிலையழிந்து விட்டது என்று நெஞ்சுருகிப் பாங்கனுக்குச் செஞ்சொல் பகர்ந்தான்.

இங்ஙனம் அகத்துறையிலும் புறத்துறையிலும் 'கண்ணியிற் பட்ட கலை' என்னும் ஒரு தொடர் சிறந்த கருத்துக்களைப் புலப்படுத்தி நின்றது. அதே தொடர் சமயத்துறைக்குப் பயன்படும் விதத்தைப் பார்த்தல் வேண்டும்.

இந்த உலகம் இருள் சூழ்ந்த ஒரு பெருங்காடு. அதில் நல்வினை தீவினைகளாகிய புதர்கள் அடர்ந்துள்ளன. இவற்றிற்கு இடையே பிறவியாகிய பெருங் கண்ணி விரிக்கப்பட்டுள்ளது. அந்தக் கண்ணியில் விழுந்த ஆன்மாக்கள் எல்லாம் தப்ப முடியாது தவிக்கின்றன. இறைவனாகிய அருளாளன் தனது அருளென்னும் கூர்ங்கத்தியால் அந்தப் பிறவிக் கண்ணியை அறுத்துத் திருவடி இன்பத்தை நல்க வேண்டும்.

ஆன்ம விடுதலை அளித்தருளும் அருளாளன் தோன்றுவது எளிதன்று. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, அவன் புகழ் பாடி அவனது அருள் வரவை எதிர்நோக்கி நிற்றல் வேண்டும். நெக்குநெக்கு நினைபவர் நெஞ்சுள்ளே புக்கு நிற்கும் பொன்னார் சடைப் புண்ணியனாகிய இன்னருளாளன் ஆன்மாவின் வினைகளை வேரறுக்க வேண்டும். அப்போதுதான் பிறவிக் கண்ணியில் விழுந்த ஆன்மாவாகிய கலைமான் விடுதலை பெற்று வீடுபேறு எய்த முடியும்.

இந்த உண்மையை ஆன்ம நேய ஒருமைப்பாட்டு உரிமைச் சகோதரர்களாகிய சன்மார்க்கத்தவர்க்கு அரு

ளோடு சொல்லப் புகுந்த வள்ளலார் பெருமான், "நான் படும் பாட்டிற்கு ஓர் எல்லையுண்டோ? கானகத்தில் விரித்த கண்ணியில் விழுந்த கலைமானைப் போன்றல்லவா கலங்குகின்றேன்; அக்கண்ணியினின்று விடுதலையளிக்கத் தண்ணருளீசன் என்று வருவானோ?" என்று அலறுகின்றார்.

வள்ளலார் பெருமான் அவ்வாறு அலறுவதெல்லாம், பிற ஆன்மாக்கள் உய்யும் பொருட்டேயல்லாமல் தம் பொருட்டன்று. அவர் இறையருள் வெள்ளத்தில் இன்பக் கூத்தாடிக் கொண்டிருந்தவர். பிறருக்கு உய்தி பெறும் நன்னெறி காட்டும் பேருள்ளத்துடன் அருட்பா அமுதினை வாரி வாரிக் கொடுத்தருளினார். அவரது அருள் உள்ளத்தைப் புலப்படுத்தும் சிறப்புடைய பாடல் இது:

'நான்படும் பாடு சிவனே உலகர்
நவிலும் பஞ்சு
தான்படு மோசொல்லத் தான்படு
மோஎண்ணத் தான்படுமோ?
கான்படு கண்ணியில் மான்படுமாறு
கலங்கி நின்றேன்
ஏன்படு கின்றனை யென்றிரங்
காயென்னில் என்செய்வனே!'

## கக. திருப்பாட்டும் தெருப்பாட்டும்

கலைகள் பலவற்றுள் கவிதை புனைவதும் ஒரு கலையாகும். அது கவிதைக்கலை அல்லது கவித்துவம் என்றே சொல்லப்பெறும். இக்கலையில் தலைசிறந்து விளங்குபவனே உண்மைக் கவிஞனாவான். அவன் உள்ளத்தில் உண்மையொளி உளதாகும். அதன் பயனாக அவன் வாக்கினிலும் ஒளியுண்டாகும். உள்ளமும் வாக்கும் ஒளி பெற்றவனே உயர்ந்த கவிஞனாக விளங்க முடியும். அவன் பண்ணமைய இன்னிசையோடு குழைத்துப் பாடிய கவிதையே 'பாட்டு' எனப்படும். கவிஞனால் செய்யப்பெறும் காரணத்தால் பாட்டைச் செய்யுள் என்றும் பகர்வர்.

இத்தகைய செய்யுளுக்கு இலக்கணம் வகுத்த பவணந்தியார்,

**'பல்வகைத் தாதுவின் உயிர்க்குடல் போற்பல**
**சொல்லாற் பொருட்கிட னாக உணர்வினின்**
**வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்'**

என்று நூற்பா ஆக்கினார். தோல், இரத்தம், இறைச்சி, மேதை, எலும்பு, மச்சை, சுவேத நீர் என்னும் எழுவகைத் தாதுக்களினால் உயிர்க்கு இடமாக உடம்பு இயற்றப் பெற்றுள்ளது. அதனாலேயே உடம்பை 'யாக்கை' என்று குறித்தனர் முன்னோர். அதுபோன்றே பொருளுக்கு இடமாகப் பல்வேறு சொற்களால், வல்லார்கள் அணிகள் அமைய ஆக்குவனவே பாக்கள் எனப்படும். இத்தகைய பாட்டுக்கு எடுத்துக் காட்டாக ஒன்றைக் குறிப்பிட விருப்புற்ற ஆறுமுகநாவலர்,

மாணிக்கவாசகர் அருளிய மணிமொழித் திருக்கோவைப் பாட்டையே குறிப்பிட்டார்.

'திரு' என்பது தெய்வத்தன்மை வாய்ந்த பேரழகைக் குறிக்கும். அதுவே என்றும் மாருது நின்று நிலவும் இணையற்ற அழகாகும். அத்தகைய திருவருள் நலங்கனியும் பாட்டே 'திருப்பாட்டு' என்று குறிக்கத் தகும். திருப்பாட்டைத் தருபவர் அருட்கவிஞரே. அன்னவர், இறைவன் புகழையே என்றும் பாடிப்பாடி மகிழ்வர். இறைவன் புகழே பொருள்சேர்ந்த புகழெனப் போற்றப்பெறும். அவன் புகழைப் பாடுவதே இருள்சேர் இருவினையும் சாராதிருக்கக் காரணமாகும். இந்த உண்மையைப் புலவர்க்கு அறிவுறுத்த விரும்பிய சுந்தரர்,

'பொய்ம்மை யாளரைப் பாடாதே எந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்!'

என்று அறிவுரை வழங்கினுர்.

அச் சுந்தரர் உலக மக்களைப் புகழ்ந்து பாடும் புலவர்கள் நிலையைக் கண்டு பெரிதும் வருந்துகிருர். "கொடுக்கிலாதானைப் பாரியே என்று பாராட்டிக் கூறினலும் கொடுக்கவே மாட்டான்; அத்தகையானைப் புகழ்ந்து பாடுவதை ஒழித்துப் பரம்பொருளாகிய இறைவனை விரும்பிப் பாடுக! அவனைப் பாடினுல் இம்மையிலேயே வேண்டும் செல்வத்தையெல்லாம் வேண்டுமட்டும் கொடுப்பான்;

'இம்மையே தரும் சோறும் கூறையும்
ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு
யாதும் ஐயுற வில்லையே'

இப்பிறவியில் நமக்கு வேண்டும் உணவும் உடையும் தடையில்லாமல் தருவான்; துன்பங்களை யெல்லாம் துடைத்துப் போக்குவான்; பிறர் புகழும் பெருமை யெல்லாம் தருவான்; மறுமையிலோ உறுதியாகச் சிவப் பேற்றையும் தந்துவிடுவான்; இதில் எள்ளளவும் ஐய மில்லை'' என்று அறவுரை பகர்ந்தருளினார் அச் சுந்தரர்.

'நைடதம் புலவர்க்கு ஔடதம்' என்பது நளகாவி யத்தைப் பற்றி வழங்கும் ஒரு பழமொழி. அக்காவியத் தைப் பாடிய கவிஞன் அதிவீரராமன் என்னும் அர சன். அவன் தனது காவியத்தைத் தன் அண்ணனாகிய வரதுங்கராம பாண்டியனிடம் காட்டி, அவன் பாராட் டைப் பெற விரும்பினான். வரதுங்கனோ, தன்னைப் போல் பிறந்து இறந்து மறைந்து போன மன்னன் ஒரு வனைத்தானே தம்பி பாடினான் என்று எண்ணி, நள காவியத்தைக் கையால் தீண்டவும் விரும்பவில்லை. பிறந் திறக்கும் மக்களுள் எவரைப் பாடினாலும் அக்கவிஞ னுக்கு நரகப் படுகுழி அங்காந்து காத்திருக்கிறது என்று அறிவுறுத்தினான் வரதுங்கராமன்.

'அங்கச் சுவைகொண்(டு) எழுநான்கு
கோடி அழிநரகப்
பங்கத்துள் வீழ அன்றோ பொன்று
வார்தமைப் பாடுவதே'

என்று அறவுரை பகர்ந்தருளினான் அம் மன்னன்.

இத்தகைய அருட்கவிஞர் வரிசையில் திருப்பாட் டுக்களாகிய தெய்வமணக்கும் செய்யுட்களைச் சித்த மெல்லாம் தித்திக்கப் பாடிய இராமலிங்க வள்ளலாரும் இணையற்று விளங்குகிறார். திருவருள் கைவரப் பெற்ற தெய்வப் பெருங் கவிஞராகிய அருட்பிரகாசர், அம்பலக்

கூத்தன் அருளைப் பாடும் பாட்டே திருப்பாட்டு என்றும், மற்றவர் புகழைப் பற்றிப் பாடும் பாட்டெல்லாம் தெருப்பாட்டு என்றும் குறிப்பிட்டுள்ளார்.

'சிதம்பரப் பாட்டே திருப்பாட்டு
சீவர்கள் பாட்டெல்லாம் தெருப்பாட்டு
அம்பலப் பாட்டே அருட்பாட்டு
அல்லாத பாட்டெல்லாம் மருட்பாட்டு
நடராசர் பாட்டே நறும்பாட்டு
ஞாலத்தார் பாட்டெல்லாம் வெறும்பாட்டு.

இங்ஙனம் திருப்பாட்டுக்கு இலக்கணம் வகுக்கும் வள்ளலாரின் தெள்ளமுத அருட்பா வாக்கினை நோக்குங்கள். அவர் அம்பலக் கூத்தனிடம் சென்று முறையிடுதலைக் கருதுங்கள். 'தில்லைக் கூத்தனைப் பாடாது, உலகில் திரிந்துழலும் மக்களைப் பற்றிப் பாடிய பாட்டிற்குப் பெயர் என்ன தருவது? என்ன பண்ணை அமைப்பது? அப் பாட்டை எழுதிய ஏட்டுக்கு எந்த மையினைத் தீற்றுவது? ஐயோ! மக்களைப்பாடும் கவிஞரெல்லாரும் சேற்றிற் புரளும் எருமைகளாக அன்றோ ஆகின்றனர்; வீடும் பஞ்சணையும் விரும்பாத நாய்களாக அன்றோ குரைக்கின்றனர்!' என்று அம்பலக் கூத்தனிடம் முறையிடுகின்றார் அருட்பிரகாசர்.

ஆட்டுக்குக் காலெடுத் தாய்நினைப்
பாடலர் ஆங்கியற்றும்
பாட்டுக்குப் பேரென்கொல் ? பண்ணென்கொல்
நீட்டியப் பாட்டெழுதும்
ஏட்டுக்கு மையென்கொல்? சேற்றில்
உறங்க இறங்கும் கடா
மாட்டுக்கு வீடென்கொல்? பஞ்சணை
என்கொல் ? மதித்திடினே.

———

## கஉ. வாழ்வில் ஒரு திருநாள்

மகனுக்குத் தக்க பருவம் வந்து விட்டதென்றால் தந்தையும் தாயும் விரைவில் அவனுக்கு மணம் முடித்து வைத்துப் பார்க்க வேண்டும் என்று விரும்புகின்றனர். பெற்ற பெண் பருவமுற்று விட்டால் 'கண்ணுள்ள போதே கலியாணத்தைச் செய்து பார்க்க வேண்டும்' என்று பெற்றோர் பேராவல் கொள்கின்றனர்.

இது பெண்கள் பெருகிவிட்ட காலம். வீட்டிற்கு வீடு பருவமுற்ற பெண்கள், தக்க மணமகன் கிடைக்கப் பெறுமல் பெற்றோருக்குப் பெருங்கவலை தந்து கொண்டிருக்கின்றனர். பெண்ணின் தந்தையோ, மாப்பிள்ளை கற்றவனாக இருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார். பெண்ணின் தாயோ, மாப்பிள்ளை செல்வனாக இருக்க வேண்டும் என்று பேராசைப்படுகிறாள். உற்றார் உறவினர்களோ, இம் மாப்பிள்ளை உயர்ந்த குலத்தவனாக இருத்தல் வேண்டும் என்று கருத்தோடு கவனிக்கின்றனர். இங்ஙனம் பலரும் பலவகையில் ஆராய்தற்குக் காரணமான ஆண்மகனைக் கணவனாக ஏற்றுக்கொள்ளக் காத்திருக்கும் பெண், அம் மாப்பிள்ளை ஆணழகன் தானா என்பதை மட்டும் அறிய ஆவல் கொள்கிறாள். பெண்ணுக்குப் பேருவகை யளிப்பது மாப்பிள்ளையின் கண்ணுக்கினிய கட்டழகு ஒன்றேதான். இதனை நன்றாக ஆய்ந்து கண்ட தமிழ் மூதாட்டியார் ஒரு பாட்டில் தெளிவாக விளக்கினார்.

**'பெண்ணுதவுங் காலை பிதாவிரும்பும் வித்தையே;**
**எண்ணில் தனம்விரும்பும் ஈன்றதாய்;—நண்ணிடையில்**
**கூரியநற் சுற்றம் குலம்விரும்பும்; காந்தனது**
**பேரழகு தான்விரும்பும் பெண்.'**

இக்காலத்தில் ஆண்பிள்ளைகளைப் பெற்றவர்கட்கு ஒரு நற்பேறு என்றுதான் சொல்ல வேண்டும். 'பெண்ணிற்காக நடந்து நடந்து காலெல்லாம் தேய்ந்து போயிற்று' என்று கூறி வந்த காலம் மாறி, இப்போது பெண்வீட்டார் மாப்பிள்ளைக்காகத் தேடித் திரிந்து திண்டாடுகின்ற காலமாயிற்று. அதனால் ஆண்மக்களைப் பெற்றவர்கள், பெண் வீட்டாரிடம் அளவுக்கு மிஞ்சிப் பேரம் பேசத் தொடங்கிவிட்டனர். எவ்வளவு நகை போடுவீர்கள்? எவ்வளவு ரொக்கம் தருவீர்கள்? கலியாணத்தை முடித்து விடுவீர்களா? என்றெல்லாம் கேட்கின்றனர். மாப்பிள்ளை அரசாங்க அலுவலனாகவோ வியாபாரியாகவோ இருந்து விட்டால் பெற்றோர்கட்கு இரட்டை யோகம் என்றுதான் சொல்ல வேண்டும்.

இப்படியெல்லாம் தேடித் திரிந்தும் தெள்ளத் தெளிந்தும் செய்யப்பெறும் திருமணத்தில் மணமகன் தில்லையைச் சேர்ந்தவனாக இருப்பான்; மணமகள் நெல்லையைச் சேர்ந்தவளாக இருப்பாள். சென்னையிற் பிறந்த பெண்ணிற்கும், குமரி முனையிற் பிறந்த குமரனுக்கும் திருமணம் நடைபெறலாம். 'மலை நாரத்தங் காயும் கடல் உப்பும் சேர்ந்தது போல' மணமக்கள் கூடுகின்றனர் என்று பெரியோர்கள் பேசுவர்.

கீழ்த் திசையிலுள்ள வங்கக்கடலில் ஒருவன் ஒரு நுகக்கோல் குச்சியை இட்டான். மேற்றிசையிலுள்ள அரபிக்கடலில் மற்றொருவன் ஒரு நுகத்தடியினை இட்டான். அலைகளால் மொத்துண்டு தள்ளப்பெற்ற அவை இரண்டும் சின்னாளில் தென்றிசைக் குமரித் துறையில் வந்து கூடின. எப்படியோ நுகத்தடியிலுள்ள துளைக்குள்ளே குச்சி புகுந்து கோத்துக்

கொண்டது. அது போலத்தான்; எங்கோ பிறந்த பெண்ணும், எங்கோ பிறந்த ஆணும் விதிகூட்ட, மணம் என்ற பெயரால் இல்லறக் கடலில் எதிர்ப்பட்டுக் கூடுகின்றனர் என்று மாணிக்கவாசகப் பெருமான் குறித்தருளினர்.

'வளைபயில் கீழ்கடல் நின்றிட
மேல்கடல் வான்நுகத்தின்
துளைவழி நேர்கழி கோத்தெனத்
தில்லைத்தொல் லோன்கயிலைக்
கிளைவயின் நீக்கியிக் கெண்டையங்
கண்ணியைக் கொண்டுதந்த
விளைவையல் லால்விய வேன்நய
வேன்தெய்வ மிக்கனவே'

என்பது அவர் திருக்கோவையார்.

'பெண் வாய்ப்பது புண்ணியவானுக்கு' என்பது ஒரு பழமொழி. ஒருவன் பெறத்தக்க செல்வங்கள் பலவற்றுள் மனைவியும் ஒரு செல்வமாகும். அவள் கற்பும் பொற்பும் வாய்ந்த காரிகையாகக் கிடைத்து விட்டால் அதுவே ஒருவனுக்குப் பெருஞ்செல்வம் என்பர் திருவள்ளுவர்.

'பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மையுண் டாகப் பெறின்'

என்பது அவர் வாய்மொழி. 'இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றில்லை' என்ற ஔவையாரின் அமுத மொழியும் அதனையே வலியுறுத்தும்.

'ஏர் பிடித்தவன் என்ன செய்வான்? பானை பிடித்தவள் பாக்கியவாட்டி' என்பது ஒரு பழமொழி. மனையறத்தை நடத்தப் புகும் ஒருவனுக்கு வாய்க்கும் மனையாள் அழகுத்தெய்வமாக மட்டும் இருந்தாற் போதும் என்று எண்ணுதல் தவறு. இல்லறத்தை

இனிது நடத்துவதற்கேற்ற நல்ல பண்புகளையுடைய நங்கையாகவும், விருந்தினரும் தானும் விரும்பியுண்ணு தற்கேற்ற சுவைமிகுந்த இனிய உணவைச் சமைக்கும் ஆற்றல் படைத்தவளாகவும் இருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பதுதான் பொருத்தமாகும். சுவை யான உணவைச் சமைத்து ஊட்டும் திறனல் கணவன் விருப்பைப் பெருக்கி மகிழும் மாதராரும் உளர்.

மனையறத்தை ஏற்கும் தக்க பருவமுற்ற ஆண்மக னும் பெண்மகளும் கூடி மணம் பெறுதற்கு முற்படும் ஒரு நாளே மக்கள் வாழ்வில் ஒரு திருநாளாகும். அது தான் 'திருமண நன்னாள்' எனப்படும். பூத்த புதுமலர் நறுமணம் பரப்பத் தொடங்குவதுபோலப் பூப்புற்ற பெண் மணம் கமழத் தொடங்கும் பொன்னாள் அந் நாள். அந்த நாளைப் பருவக் காளையரும் பருவ மங்கை யரும் பேராவலுடன் எதிர்நோக்கி இருக்கின்றனர்.

வாழ்நாள் முழுதும் திருமண அழகராகவே திகழ்ந்த ஆலாலசுந்தரருக்கு வாழ்வில் இத்தகைய திரு நாள் மும்முறை வந்தது. ஆனால் முதல்முறை நடை பெற்ற திருமணம் பெருங்குழப்பத்தில் முடிந்தது. அந்த மணம் நடைபெறவில்லை. புத்தூர்ச் சடங்கவி சிவாசாரியார் மகளை மணம் புரிந்து கொள்ளச் சென்ற இடத்தில் பெண்ணிற்கு மங்கல நாண் பூட்டுவதற்கு முன்பே பழுத்த கிழவர் ஒருவர் மணப்பந்தலிற் புகுந்து பெருத்த குழப்பத்தை விளைத்தார். சிவபெருமானே அங்ஙனம் ஆலாலசுந்தரரைத் தடுத்தாட் கொள்ள வந் தார்.

அருட்பிரகாச வள்ளலாராகிய இராமலிங்கப் பெருமானுக்கும் வாழ்வில் ஒரு திருநாளாகிய திருமண

நாள் வரத்தான் செய்தது. அவருடைய தமக்கை யார் மகளையே அவருக்கு மணம் செய்துவைத்தனர். மணம் நடைபெற்ற அன்று மட்டும்தான் அப்பெண்ணின் பக்கத்தில் இருந்திருப்பார் இராமலிங்கர். அப்பொழுதும் அப்பெண்ணின் கையில் திருவாசகத்தைக் கொடுத்து வாசிக்குமாறு செய்துவாளா இருந்தார். மறுநாளே அப் பெண்ணை விட்டுப் பிரிந்து சென்றார். இவர் பின்னொரு நாளில் மற்றொரு மணம் செய்து கொள்ளவேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆனால் அந்த மணம் எவ்விதம் அமையவேண்டும் என்று விரும்பினார் என்பது சிறிது எண்ணத்தக்கது.

'ஆலாலசுந்தரர் திருமணத்தில் சிவன் ஒரு முதியவர் வடிவில் வந்து 'நீயும் நின் வழிவந்தோரும் எனக்கு வழிவழி அடிமையாவீர்' என்று கூறி வலிய ஆட்கொண்டது போல, என்னையும் இறைவன் ஆட்கொள்ள வருவானாகில் இன்னுமொரு திருமணம் செய்து கொள்ள விரும்புகிறேன்' என்று கூறினார் இராமலிங்கர். அங்ஙனம் ஆட்கொள்கின்ற இறைவன் எப்போதும் தன் அடியார் கூட்டத்தில் ஒருவனாக என்னை வைத்துக்கொள்ள வேண்டும் என்றுகூட நான் விரும்பவில்லை; ஒரு கணப்பொழுது மட்டும் அவ்வடியார் கணத்துள் ஒருவனாக இருக்கும் பேற்றை வழங்கினாற் போதும்; அத்தகைய அரிய வாய்ப்பினைக் கொடுப்பானாயின் இன்னும் ஒரு திருமணத்தைச் செய்து கொள்வேன்' என்று உறுதி கூறுகிறார்.

முன்மணத்திற் சுந்தரரை முன்வலுவிற் கொண்டதுபோல்
என்மணத்தில் நீவந் திடாவிடினும்—நின்கணத்தில்
ஒன்றும் ஒருகணம் வந்(து) உற்றழைக்கின் செய்ததன்றி
இன்றும் ஒருமணம்செய் வேன்.

## கரு. என்றும் இறவா நிலை

ஐம்பெருங் குற்றங்களுள் ஒன்ருக வைத்து எண்ணப்படுவது கள்ளுண்டல். திருமகளால் வெறுக்கப் பட்டவர்க்கு விருப்பமான நட்புப் பொருள்களுள் ஒன்று கள்ளாகும்.

'இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு'

என்பது தமிழ்மறை.

கள்ளுண்டலாகிய பெருங்குற்றத்தைப் பற்றிப் பேசவந்த பெருநாவலராகிய திருவள்ளுவர் 'கள்ளுண்ணுமை', என்றே தனி அதிகாரம் ஒன்றை வகுத்தருளினுர். கள்ளுண்பார்க்கு நல்லறிவு கொளுத்தக் கருதிய அப்புலவர் மிகவும் பக்குவமாகத் தக்கவாறு அறிவுறுத்துகிருர்.

ஒருவன் கள்ளை விருப்புடன் பருகிக்கொண்டிருந் தான். அதனை வள்ளுவர் பார்த்தார். ஐயோ! இவன் பெரிய பாவத்தைப் புரிகிருனே! இவனுக்கு எப்படி அறிவுரை கூறுவது? கள்ளுண்ட மயக்கத்தால் கல்லைக் கொண்டு எறிந்துவிடலாகாதே? என்று பலவாறு ஆராய்ந்து மிகவும் அன்பாகவும் மரியாதையாகவும் "ஐயா! உண்ணற்க" என்று பணிவுடன் வேண்டினுர். எதனை? என்று கேட்டான் அக்களிமகன். அதன் பின்னர்த்தான் 'உண்ணற்க கள்ளை' என்று உரைத்தருளினுர். அதற்குமேல் அக்கட் குடியன், 'உண்ணத்தான் செய்வேன்; நீர் என்ன சொல்லுவது?' என்று சிறிது சினந்தான். அவனது நிலையைக் கண்ட வள்ளுவர்

'உணில் உண்க' என்று மேலும் பணிவுடனும் கனிவுடனும் கூறினர். அது கேட்ட களிமகன் மகிழ்வுடன் மேலும் குடித்தான்; களிமயக்கால் அறிவிழந்து தரையிற் கிடந்து புரண்டான். தெருவிற் புரளும் அக்களிமகனைப் பார்த்தவர் எல்லோரும் 'குடிகாரன்! குடிகாரன்!' என்று பழித்து இகழ்ந்தனர். சிறிது நேரத்தில் அறிவு தெளிந்து எழுந்தான் அக்குடியன். கண்டவர் வெறுக்குமாறு அலங்கோலமாகக் கிடந்த அவனை வள்ளுவர் தம் கரங்களால் எடுத்து உட்காரவைத்து, 'இந்த இழிநிலை உனக்கு எதனால் ஏற்பட்டது தெரியுமா? எல்லாம் நீ குடித்த கள்ளால்தான்; நல்லவர்கள் உன்னை மதிக்க வேண்டும் என்று எண்ணினல் இந்தச் செயலை அறவே விட்டொழிப்பாய்!' என்று அன்புடன் வேண்டினர்.

'உண்ணற்க கள்ளை, உணில் உண்க, சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார்'

என்பது அவருடைய பண்பட்ட பொன்மொழியாகும்.

பொல்லாத பிள்ளையாக இருந்தாலும் பெற்ற தாய் அப்பிள்ளையை வெறுப்பதில்லை. அந்தப் பிள்ளை எந்தத் தீச்செயலைச் செய்ததாகப் பிறர் கூறினும் அவன் அப்படிச் செய்திருக்கமாட்டான்; பிற தீயபிள்ளைகள் சேர்க்கையால்தான் செய்திருக்க வேண்டும் என்று வாதித்துச் சாதிப்பாள். அத்தகைய பிள்ளையிடத்திலும் தாய் அன்பு காட்டுவதில் குறைவேயிராது. ஆனல், தன் பிள்ளை கட்குடியன் என்பதைத் தாய் அறிந்தால் பொறுக்கமாட்டாள். அவனை அறவே வெறுத்துத் தள்ளுவாள். அங்ஙனமாயின் சான்றோர் கள்ளுண்டு களிக்கும் புல்லரை என்னவாறு எண்ணுவர்? என்று கேட்கிறார் திருவள்ளுவர்.

'ஈன்ருள் முகத்தேயும் இன்னுதால் என்மற்றுச்
சான்ரோர் முகத்துக் களி,

இங்ஙனம் அறிவை மயக்கி, உணர்வைக் கலக்கி, இழிவைப் பெருக்கும் பனங்கள்ளைப் பருகிக் குடிவெறியில் கூத்தாடும் சிறுமதியாளரும் பெரும்புலவரெனவும் அருங்கவிஞரெனவும் போற்றப்படுகின்றனர்.

அருட்பெருங் கவிஞராகிய வள்ளலார் தில்லைக் கனகசபை நடுவிலிருந்து கள்ளுண்டேன் என்று களிப்புடன் குறிப்பிடுகிருர். பனைமரத்தின் அடியிலிருந்து பாலைப் பருகினுலும் கள்ளைப் பருகியதாகவே உலகம் சொல்லும். ஆனுல் கனகசபை நடுவிலிருந்து உண்மையாகவே கள்ளைப்பருகினுலும் பாலேயோ, தேனையோ பருகியதாகவே உலகம் பகரும். அதுபோல வள்ளலார் பெருமான் 'கனகசபை நடுவிலிருந்து கள்ளுண்டேன்' என்று கூறினுல் கூத்தப்பெருமானது குளிர்ந்த அருளாகிய கள்ளைப் பருகியதாகத்தான் அறிவுடையோர் கருதுவர்.

பருவம் எய்திய பாவை யொருத்தி தில்லைப் பொன்னம்பலத்துள்ளே புகுந்தாள். அங்கு ஆனந்தக் கூத்தாடும் பெருமானின் திருமேனி யழகைக் கண்ணுரக் கண்டு கழிபேருவகை கொண்டாள். அவன்மீது கொண்ட அளவில்லாத காதல் என்னும் கள்ளையுண்டு மீண்டாள். காதற் கள்ளை யுண்ட களிமயக்கால் ஏதேதோ பேசிப் பிதற்றினுள். ஆடிப்பாடி அகமகிழ்ந்தாள். சற்று நேரத்தில் மயக்குற்றுத் தரையில் விழுந்து கிடந்தாள். உடன் வந்த தோழி, அவள் உள்ளத்தில் புகுந்த வள்ளலைக் கள்ளனெனக் கட்டுரைத்தாள். அது கேட்ட தாய் அவள்மீது சினங்கொண்டு கண் சிவந்

தாள். பக்கத்து வீட்டுப்பெண்கள் எல்லாம் சூழ்ந்து நின்று கொண்டு அவளைப் பரிகாசம் செய்தார்கள்.

இந்தக் காட்சியை நம் நினைவுக்குக் கொண்டுவரும் வள்ளலார், தம் ஆன்ம நாயகனுகிய ஆனந்தக் கூத்த னின் அருளமுதைப் பருகி இன்புற்று நிற்கும் தமது நிலையையே புலப்படுத்துகின்றார்.

'கள்ளுண்டாள் எனப்புகன்றீர் கனகசபை நடுவே
கண்டதலால் உண்டதிலை என்றவத ஞலோ
எள்ளுண்ட மற்றவர்போல் என்னைநினை யாதீர்
என்றுரைத்தேன் இதனலோ எதனலோ அறியேன்
உள்ளுண்ட மகிழ்ச்சியெலாம் உவட்டிநின்ருள் பாங்கி
உவந்துவளர்த் தவளும்என்பால் சிவந்தகண்ண ளானுள்
துள்ளுண்டு பெண்களெலாம் சூழ்ந்துநொடிக் கின்ருர்
சுத்தர்நட ராசர்திருச் சித்தம்அறிந் திலனே ?'

என்பது பத்தியாகிய கள்ளையுண்ட வள்ளலாரின் தெள்ளமுத வாக்காகும்.

இங்ஙனம் பத்தியாகிய கள்ளையுண்ட வள்ளலார் பித்தேறிப் பிதற்றுகின்ற மொழி கேட்டுப் பழித் துரைத்தார் பலர். குடிகாரனைப் போல் குளறுகின் ருனே என்று குறைத்துப் பேசினுர் பலர். அந்த மொழி களை எல்லாம் கேட்ட அருள் வள்ளலார் பழித் துரைத்த பாமர மக்களுக்குப் பக்குவமாக இன்மொழி பகர்ந்தருளினுர்.

ஐயோ! மக்களே! நான் கனகசபை நடுவிருந்து கள்ளைக் கண்டதும் உண்டு; அதனை நன்ருக உண் டதும் உண்டு; நான் உண்ட கள், பனையிலும் தென்னையிலுமிருந்து வடித்திறக்குவதன்று; அது எக்காலத்திலும் இறவாத நிலையாகிய மரணமிலாப் பெருவாழ்வைத் தரும் மாண்புடைய கள்ளன்ருே!

மற்றக் கள் மதியை மயக்குவது போன்று, நான் உண் கள் மயக்குவதன்று ; உள்ளத்திற் குடிகொண்ட மயக் கத்தையெல்லாம் அறவே ஒழிக்கும் ஆற்றலுடைய கள் ளன்றோ! என்பால் அன்பு கொண்டவர்கள் என்னை அடுத்துக் கண்டாலும் அவர்கட்கு ஞானமன்றோ தோன்றும்; அத்தகைய அருளமுதப் பெருங்களை யன்றோ நான் ஆரப் பருகியுள்ளேன்! என்று பெரு மிதத்துடன் பேசுகின்றார் அருள்வள்ளலார்.

கள்ளுண்டாள் எனப்புகன்றார் கனகசபை நடுவே
 கண்டதுண்டு சிற்சபையில் உண்டதுமுண் டடிநான்
எள்ளுண்ட பலவிடயத்(து) இறக்குங்கள் அலவே
 என்றும்இற வாநிலையில் இருத்துங்கள் உலகர்
உள்ளுண்ட போதுமயக் குற்றிடுங்கள் அலவே
 உள்ளமயக் கனைத்தினையும் ஒழித்திடுங்கள் மடவாய்!
அள்ளுண்ட பிறரும்எனை அடுத்தடுத்துக் கண்டால்
 அறிவுதரும் அவர்க்கும் இங்கே யானுண்ட கள்ளே.

---

## கச. அடிகளார் அங்கமாலை

நம் நாட்டில் 'நாலுபேர் சொல்வதைக்கேள்' என் னும் பழமொழி உலவி வருவதை எவரும் அறிவர். உடன் பிறந்த சோதரருக்குள் ஏதேனும் மனவேறு பாடு ஏற்பட்டால் அதனைக் கண்ட நல்லவர்கள், "ஏன் நீங்கள் சண்டையிட்டுக் கொள்கிறீர்கள்? நாலு பேர் சொல்வதைக் கேட்டு நடப்பீர்!" என்று சொல்லு வதை நாம் கேட்டிருக்கிறோம். பக்கத்து வீட்டுக்காரரி டம் மிக்கதொரு வாதம் ஏற்பட்டால் இதனை நாலு

பேரிடம் சொல்லுவோம்; அவர்கள் சொல்வது போல் நடப்போம்' என்ற முடிவுக்கு இருவரும் வந்து விடுகின்றனர். இங்ஙனம் எந்தச் செய்தியிலும் இறுதியில் உறுதிகூற நான்குபேர் வேண்டப்பெறுகின்றனர்.

இந்தப் பழமொழி தோன்றியது எப்போது? எந்த அடிப்படையில் எழுந்தது? இவற்றைப்பற்றிச் சற்று ஆராய்வோமானால் சைவ சமய குரவர்கள் நால்வர் காலத்திற்குப் பின்தான் இந்தப் பழமொழி வழக்காற்றிற்கு வந்திருக்க வேண்டும். சைவ சமய குரவருள்ளே, ஒருவராகிய மாணிக்கவாசகர் மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்தவர். அப்பரும் சம்பந்தரும் ஏழாம் நூற்றுண்டில் இருந்தவர்கள். சுந்தரர் ஒன்பதாம் நூற்றுண்டில் உலகில் திகழ்ந்தவர். இவர்கள் நால்வரும் வாழ்ந்து மறைந்த ஒன்பதாம் நூற்றுண்டிற்குப் பின்னரே இந்தப் பழமொழி, மக்கள் வாயிற் பிறந்திருக்க வேண்டும். ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளாக இப்பழமொழி, மக்கள் உள்ளத்தில் நன்றாக ஊறிப்போய் விட்டது. அதுவும் சமய வாழ்வில் அந்த நால்வர் காட்டும் நெறியே நன்மையானது என்ற உண்மை தமிழகத்தில் நன்கு வேரூன்றிவிட்டது.

இந்நால்வர் பெருமக்களின் நல்லருட் பாசுரங்களில் உள்ளந் தோய்ந்த வள்ளலார், அவர்கள் காட்டிய அருள் நெறியிலேயே சென்று இன்பம் கண்ட ஞானச் செல்வராவர். அவர்கள் வாழ்வின் அற்புதங்களையெல்லாம் எண்ணியெண்ணி எல்லையில்லாத இன்ப வெள்ளத்தில் ஆழ்ந்த அடிகளார், அந்நால்வர் அமைத்த நெறியைச் செப்பனிட்டுச் சீர்செய்தார்.

ஓர் ஊரிலிருந்து மற்ருேர் ஊருக்குச் செல்லும் சாலை எக்காலையிலும் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஒரு கால் திருத்தமாக வகுத்தமைக்கப்பெற்ற அச் சாலை நாளடைவில் மழையாலும் வெயிலாலும் மக்களின் போக்கு வரவாலும் சிதைந்து சீர்கெட்டு விடுவதைப் பார்க்கிருேம். அங்ஙனம் கேடுற்ற சாலையைப் பழுது பார்த்துச் செப்பனிடுவதையும் காணுகிருேம். அஃதே போல் நம் சமய குரவர்கள் வகுத்துத் தந்த சமயப் பாதையிலும் போற்றுவாரின்மையால் புல்லும் பூண்டும் கல்லும் முள்ளும் செறிந்து நிறைந்து விட்டன. அதனுல் உண்மையான பாதை மறைந்து விட்டது.

இதனைக் கண்ணுற்ற இராமலிங்க அடிகளார், 'நால்வர் காட்டிய நெறி நம் நாட்டிற்கு ஏற்ற நன்னெறியன்ருே! இவ் வுலகிற்கே ஏற்ற உயர்ந்த நெறி அதுவேயன்ருே! அந்நெறி பழுதுறுவதா?' என்று உள்ளம் பதைபதைத்தார்; உயிர் துடித்தார். அச் சமயப் பாதையை மூடிக் கிடந்த முள்ளையும் கல்லையும் புல்லையும் பூண்டையும் கல்லியெறிந்தார். அவர்கள் வகுத்த அருமையான பாதையை அரசப்பாதையாக-எல்லோரும் செல்லுதற்குரிய இன்பப் பாதையாக விளக்கிக் கொடுத்தார். அதுதான் திருநெறி! இறைவன் திருவருளைப் பெறுதற்குரிய பெருநெறி! சமரச சன்மார்க்க நன்னெறி!

'திருநெறி ஒன்றே
அதுதான் சமரச சன்மார்க்கச்
சிவநெறி என்று உணர்ந்து
உலகீர்! சேர்ந்திடுமின்!'

என்று உலகமக்களை அறைகூவி அழைத்தார். 'சேர வாரும் செகத்தீரே!' என்று பாரினர்க்கெல்லாம் பண்பான வேண்டுகோள் விடுத்தார்.

தமிழகத்தின் சமய வாழ்வில் நன்னெறி காட்டிய நால்வருள்ளும் நாவுக்கரசர் மிகவும் பண்பட்ட தகவுடையார். எண்பத்தோராண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்து எண்ணற்ற இன்னல்களுக்கெல்லாம் உள்ளாகிச் சுடச் சுடரும் பொன்போற் சுடர்வீசி நின்ற சொல்லரசர் அவர். அவருடைய அருமைப் பாசுரங்கள் எல்லாம் மிகுந்த உருக்கத்தை ஊட்டுவன; பல அரிய அனுபவ உண்மைகளை அறிவிப்பன.

இம்முறையில் எழுந்த அவருடைய பதிகங்களில் ஒன்று 'திருவங்கமாலை' என்பது. நமக்குள்ள தலை, கண், செவி, மூக்கு, வாய், கை, கால், நெஞ்சம் ஆகிய அங்கமெல்லாம் உலக வாழ்வு ஒன்றற்கே தரப்பெற்றுள்ளன என்று கருதுவது தவறு. உயிரின் ஈடேற்றத்திற்காகவும் அவை சாதனமாக அமைந்துள்ளன என்பதை உணர வேண்டும். 'உடம்பு அழிந்து போகுமானால் உயிரும் அழியும்; திடம்பெற மெய்ஞ்ஞானம் சேரவும் முடியாது; உடம்பை நன்கு வளர்த்தவரே உயிரையும் வளர்த்தவராவர்' என்று மொழியும் திருமூலர் மந்திர வாக்கு இங்குச் சிந்திக்கற் பாலதாகும். உயிர் திருவருளுக்குப் பாத்திரமாகிப் பேரின்பத்தைத் துய்க்கப் பெருந்துணையாய் நிற்பதே உடல் என்பதுதான் அவர் கருத்து. ஆதலின் இவ் வுடலுறுப்புக்களை யெல்லாம் திருவருள் நெறியில் சிறுபொழுதாவது செலுத்த வேண்டும் என்ற கருத்தைத் திருநாவுக்கரசர் அங்கமாலைப் பதிகத்தில் பங்கமற விளக்கினார்.

**'தலையே! நீ வணங்காய்—தலை**
**மாலை தலைக்கணிந்து**
**தலையா லேபலி தேருந் தலைவனைத்**
**தலையே! நீவணங்காய்'**

என்று தம் தலைக்கும், அருளைப் பெறவிரும்பும் மக்களின் தலைகளுக்குமாகத் திருநாவுக்கரசர் கட்டளை யிட்டருளினார். இந்த நன்னெறியைப் பின்னாளில் மூடிக்கொண்ட புதரைப் போக்க முனைந்தவர் புண்ணியப் பெருமானாகிய அருட்பிரகாசர். அவர் தம் கவி யென்னும் மண்வெட்டி கொண்டு பண்படுத்தினார்.

'வீட்டுத் தலைவநின் தாள்வணங் கார்தம் விரிதலைசும்
மாட்டுத் தலை,பட்டி மாட்டுத்தலை, புன் வராகத்தலை
ஆட்டுத் தலை,வெறி நாய்த்தலை, பாம்பின் அருந்தலை,கல்
பூட்டுத் தலை,வெம் புலித்தலை, நாற்றப் புழுத்தலையே!'

முத்தி வீட்டிற்குத் தலைவனாகிய முக்கட் பெருமானே! நின் திருவடியை வணங்கும் தலையே தலையாய நிலைபேறுடைய தலையாகும். பிற தலைகள் எல்லாம் பூசுதற்கு எண்ணெய்கூட இல்லாது பரந்து கிடக்கும் பறட்டைத் தலையாகும்; விறகைத் தூக்கச் சும்மாடு வைக்கும் தலை; பட்டியில் அடைக்கப்படும் கள்ள மாட்டின் தலை; மிகவும் இழிந்த பன்றித்தலை; அற்பமான ஆட்டின் தலை; வெறிபிடித்த நாயின் தலை; நஞ்சுடைய நாகத்தின் தலை; கல்லேற்றும் தலை; கொடிய நாற்றம் கொப்புளிக்கும் தலை; புழுத்து வடியும் புன்மைத்தலை. இங்ஙனம் இறைவன் இணையடி வணங்காத மக்களின் தலையை இகழ்ந்து இடித்துரைத்தார். இவ்விடித்துரை, புதரை வெட்டும் மண்வெட்டி போன்றே விளங்குகின்றதன்றோ!

கந்த கோட்டத்துப் பெருமானிடம் முறையிடும் கருணை வள்ளலார் இக்கருத்தை மீண்டும் வலியுறுத்துகின்றார்.

'எங்கள்பெரு மான்!உனை வணங்காத மூடர்தலை
இகழ்விற(கு) எடுக்கும் தலை'
'அப்ப! நின் திருவடி வணங்கினோர் தலைமுடி
அணிந்தோங்கி வாழுந்தலை'

என்னும் தெய்வமணிமாலைப் பாடல் அடிகளும் நாவுக்கரசர் நவிலும் தலைப்பேற்றையே வலியுறுத்துகின்றன அன்றோ!

---

## கரு. தேனமுதத் திருப்பாட்டு

பண்ணொடு பாடப்பெறும் இன்னிசைப் பாக்களே பாட்டுக்கள் எனப்படும். இழுக்குடைய பாவாயினும் இசையுடன் கலக்குமாயின் இன்பம் விளைக்கும். பாட்டின் பொருளுக்கு ஏற்பப் பண் அமைய வேண்டும். இன்றேல் அப் பண் பாடுவார்க்கும் கேட்பார்க்கும் பயன் விளைப்பதில்லை. 'பண்ணென்னும் பாடற்கு இயைபின்றேல், என்று கேட்பார் தெய்வப் புலவர் திருவள்ளுவர்.

நந்தம் செந்தமிழ் மொழியில் ஐவகை இலக்கணங்கள் அமைந்துள்ளன. அவை எழுத்துச் சொல் பொருள் யாப்பு அணி என்பன. இத்தகைய சிறந்த இலக்கண அமைதி, உலகில் வேறு எந்த மொழிக்கும் செம்மையாக அமையவில்லை என்பர் பன்மொழியறிஞர். இதனாலேயே தமிழை 'மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல் எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ?' என்று கேட்பார் பரஞ்சோதி முனிவர். ஐவகை இலக்கணங்களுள்

ஒன்றாகிய யாப்பு என்பது பாட்டின் இலக்கணத்தைப் பகரும் பகுதியாகும். யாப்பு என்ற சொல்லுக்கே செய்யுள், பாடல் என்ற பொருள்கள் உண்டு.

இலக்கண ஆசிரியராகிய பவணந்தி முனிவர், செய்யுள் இலக்கணத்தை ஒரு சிறு பாவிலே வகுத்துள்ளார். தோல், இரத்தம், தசை, நார் முதலிய தாதுக்களால் உயிருக்கு உறைவிடமாக உடம்பு அமைக்கப் படுவது போலத்தான் பாட்டு அமைக்கப்படுகிறது என்கிறார். பாட்டு, பல்வகைச் சொற்களால் பொருளுக்கு உறைவிடமாக அறிவுடையோரால் அமைக்கப் படுகிறது. அவர்களது அறிவின் பெருமைக்கேற்ப அணிபெறச் செய்யப்படுவது அப்பாட்டு.

உயிர்க்கு உறையுளாகும் உடம்பைப் படைப்பவன் இறைவன். பொருளுக்கு உறையுளாகும் பொற்புடைய பாடலைப் படைப்பவன் கவிஞன். இறைவன் படைக்கும் உடம்புகள் ஒரு கால எல்லைக்குப் பின்னர் அழிந்து போவன. கவிஞன் படைப்பாகிய பாட்டோ பாருலகம் உள்ளவரைக்கும் அழியாது நின்று நிலவும் ஆற்றல் உடையது. இதனைக் குமர குருபரர் நயம்படக் கூறுவார்.

.....................' மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா; புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு'

என்பது அத்தெய்வக் கவிஞர் திருவாக்கு.

ஒருவன் உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாகுமானால் அவனது வாக்கிலும் ஒளியுண்டாகும். மனமும் மொழியும் ஒளி பெறுமாயின் அவன் தெய்வக் கவிஞனாகத் திகழ்வான். அவனிடமிருந்து வெள்ளத்

தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும் கவிப் பெருக்கும் பொங்கியெழும். அவற்றைப் பருகுவா ரெல்லாரும் அறியாமைப் பள்ளத்தினின்று வெளி யேறி அறிவொளியைப் பெற்றுப் பதவி கொள் வார்கள். அவர்கள் இவ்வுலகிலேயே அமரர் சிறப்பை அடைந்து அகமகிழ்வர் என்று உண்மைக் கவிஞர் உயர்வைப் பாரதியார் பாராட்டுவார்.

இறைவன் திருவருட் பேரொளியைச் சிந்தை யிலும் செந்நாவிலும் இனிது பெற்ற பேரருட் கவிஞர் பாடியருளிய பாட்டையே திருப்பாட்டு என்று குறிப் பிடலாம். திரு என்பது தெய்வத் தன்மையைக் குறிப்பது. தேன் மிகவும் தித்திப்பான ஒரு பொருள். நாம் அருந்திச் சுவைகண்ட நறும்பொருள். அமுதம் நாம் அறியாதது. பாலாழியில் தோன்றிய அமுதத் தைப் பற்றி நூல்கள் சொல்லுகின்றன. அதனை உண்டவர் தேவர். அது சாவாமைக்குக் காரணமான தேவாமுதம். அதனைத் திருமால், தேவர்கட்கெல்லாம் பகுத்துக் கொடுத்தான் என்பர். நாம் கண்ட தேன்— உண்ட தேன், உடல் நோய்க்கு உற்ற மருந்தாவது. உடம்பிற்கும் இருதயத்திற்கும் உறுதி தருவது. நாம் உண்டு கண்ட தீந்தேனைப் போலவும், நூல்கள் போற்றும் ஆற்றல் வாய்ந்த அமுதம் போலவும், நம் தெய்வத் தமிழில் பண்ணமைந்த பாக்கள் எண்ணற் றவை உள்ளன. அவைகளெல்லாம் திருப்பாட்டுக் களே. இறைவனது பொருள்சேர் புகழை விளக்கும் பொன்மொழிப் பாக்களே.

உள்ளத்திற்கும் ஓதுகின்ற நாவிற்கும் ஒருங்கே இனிக்கும் உயரிய திருப்பாட்டுக்களை அருளிய தெய்வக்

கவிஞர் பலருள் சுந்தரரும் ஒருவர். அவர் இறைவனால் தடுத்தாட்கொள்ளப் பெற்ற தனிப்பெருமை உடையவர். தம்பிரான் தோழரெனத் தலைக்கொண்டு போற்றும் தகுதியுற்றவர். வன்றொண்டர் என்று இறைவனாலேயே வாயார வாழ்த்தப் பெற்றவர் 'பித்தன்' என்று தொடங்கி, என்னைப் பாடுக!

'அர்ச்சனை பாட்டே ஆகும்; ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடுக!'

என்று சிவபெருமானே தன்னைப் பாடுமாறு அருள் செய்யச், சிந்தைக்கு இனிக்கும் செந்தமிழ்ப் பாக்களைப் பாடியருளியவர் சுந்தரர். இவர் ஒருகால் தில்லைப் பொன்னம்பலத்தின் முன்னர் நின்று, பண்ணொன்ற இன்னிசைப் பாடல் பாடிய காலத்துத் தில்லைக்கூத்தன் செயல் மறந்து அவரது பாவிலே மூழ்கிவிட்டார். சேரமான் பெருமானுக்கு வழக்கமாக நாள்தோறும் கேட்பித்தருளும் சிலம்பொலியைக் காட்டாது சிந்தை சொக்கிவிட்டார் என்று சேக்கிழார் கூறுவார்.

இத்தகைய தெய்வத் திருவருட் கவிஞராகிய சுந்தரருடைய செந்தமிழ்ப் பாக்களை அருட்பிரகாச வள்ளலார் நாள்தோறும் ஓதியோதி இன்புற்றார். இறைவனையே சொக்கவைத்த சுந்தரப் பாடல், இராமலிங்கரின் இதயத்தை என்னபாடு படுத்தியிருக்கும்! அதனை நம்மால் நவில முடியுமா? அப்பெருமானே தமது அனுபவத்தை அழகுற ஒரு திருப்பாட்டில் குறிப்பிடுகிறார்.

அவர் சுந்தரரது செந்தமிழ்த் தேவாரத் திருப்பாட்டுக்களை நாள்தோறும் ஓதும்போதெல்லாம் தம்மை மறந்தார். அவருடைய நாக்குமட்டும் அவ்

வாக்கினை உச்சரிக்கவில்லை. ஊனும் உள்ளமும் உயிரும் உயிருக்கு உயிரும் ஆகிய எல்லாம் ஒன்று போல் ஓதின. இஃது உண்மை அனுபவம் என்று உரைத்தருளுகின்றார்.

இத்தகைய பேரானந்தப் பேரருள் அனுபவத்தை அளித்தருளும் பேராற்றல், சுந்தரருடைய செந்தமிழ்ப் பாட்டுக்கு உண்டு என்பதைத் 'தேனமுதத் திருப் பாட்டு' என்று குறிக்கும் சிறு தொடராலேயே திறம் பட விளக்கியருளிய வள்ளலார் பெருமானின் தெய்வக் கவித்திறம், உள்ளுதோறும் உள்ளுதோறும் உள்ளத்தை உருக்குவதாகும். இக் கருத்தைத் தெள்ளிதின் விளக்கும் வள்ளலாரது திருப்பாட்டை விருப்புடன் ஓதி இன்புறலாம்.

தேன்படிக்கும் அமுதாம்உன்
திருப்பாட்டைத் தினந்தோறும்
நான்படிக்கும் போ(து)என்னை
நான்மறந்தேன் நாவொன்றோ ?
ஊன்படிக்கும் உளம்படிக்கும்
உயிர்படிக்கும் உயிர்க்குயிரும்
தான்படிக்கும் அனுபவங்காண்
தனிக்கருணைப் பெருந்தகையே.'

---

## கசு. திருவருள் தீங்கனி

தமிழகத்தில் மிக்க சுவையுடைய முக்கனிகளை மக்கள் பெரிதும் விரும்புவர். அவை மாங்கனி, பலாக் கனி, வாழைக்கனி என்பன. சேலத்து மாம்பழமும், பண்ணுருட்டிப் பலாப்பழமும், திண்டுக்கல் வாழைப்

பழமும் சிறப்புடையன என்பர். இவை தின்னத் தின்னத் தெவிட்டாமல் தித்திக்கும் தீங்கனிகள். இவற்றின் இனிய சுவையைக் கண்ட இராமலிங்க வள்ளலார், 'தனித்தனி முக்கனி பிழிந்து' என்று பாடுவார்.

இவற்றை யன்றி, வேறு சில வியப்பூட்டும் சிறப்புடைய தெய்வத் தீங்கனிகளும் நம் தென் தமிழ்ப் பொதிய மலையில் திகழ்ந்தன. புளிஞரும் ஏற முடியாத பொருப்பின் உச்சியில் பாறைப் பிளவில் ஓங்கி வளர்ந்த நெல்லி மரத்தில் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை இன்னமுதக் கனியொன்று தோன்றுமாம். அதனை உண்டவர் பல்லாண்டுகள் நல்லுடம்பு பெற்று இன்புற்று வாழ்வர். அதனை அரிதின் முயன்று பெற்ற அதியமான் என்ற வள்ளல், தமிழ் மூதாட்டியாராகிய ஔவையாருக்கு அக்கனியினை அன்போடு வழங்கினான். அதன் அருமைகளைக் கூருமலேயே அவர்பால் கொடுத்தான். அந்த நெல்லிக்கனியை உண்டு, அதன் நீள் சுவையைக் கண்ட தமிழ் மூதாட்டியார் அதியமானை வாயார வாழ்த்தினார்.

'நீல மணிமிடற்(று) ஒருவன் போல
மன்னுக! பெரும! நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத்(து) அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா(து)
ஆதல் நின்னகத்(து) அடக்கிச்
சாதல் நீங்க எமக்(கு) ஈத்தனையே!'

என்பது அம்மூதாட்டியாரின் அமுத மொழியாகும்.

ஔவையார் உண்ட அமுத நெல்லிக்கனியைப் போன்றே, அப்பொதிய மலையில் நாவற்கனியொன்றும் விளங்கியது. அதுவும் பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை ஒரு கனியே தோன்றுமாம். அதனை உண்டவர் பன்னிரண்டு ஆண்டுகள் பசிப்பிணியால் வருந்தார். அது பனம்பழம் போன்று பருமனுக இருக்குமாம். அதனைப்பற்றிய வரலாறு ஒன்று, மணிமேகலை என்னும் பழந்தமிழ்க் காவியத்திற் காணப்பெறுகின்றது.

பொதிய மலையில் பன்னிரண்டு ஆண்டுகள் அருந் தவம் புரிந்த விருச்சிகன் என்னும் முனிவன் அவ்வமுத நாவற்கனியைப் பறித்துத் தேக்கிலையில் பொதிந்து காட்டாற்று மணற் பரப்பில் வைத்து நீராடச் சென்றான். அவ்வழியே தன் கணவனுடன் களியாட்டுப் புரிந்து கைகோத்து நடந்து வந்த காயசண்டிகை யென்னும் இளம்பெண், அந்த நாவற்கனியைக் காலால் மிதித்துச் சிதைத்தாள். இதனை உணர்ந்த விருச்சிகன் அப்பெண்ணைப் பன்னிரண்டு ஆண்டுகள் தன்னைப் போல் பசிப்பிணியால் வருந்துக என்று சபித்தான்.

கணவன் தந்த இரு மாங்கனிகளில் ஒன்றை அடியவர்க்குப் படைத்து விட்டார் காரைக்காலம்மையார். இதனை உணராத கணவன், ஒரு கனியை உண்டு, மற்றொன்றையும் கொண்டு வருக என்றபோது, அம்மையார் உற்ற இடத்து உதவும் கற்றைச்சடைப் பெருமானைக் கனிந்துருகி நினைந்தார். அப்பெருமான் திருவருளால் 'கைம்மருங்கு வந்திருந்தது அதிமதுரக் கனியொன்று' என்று சேக்கிழார் இயம்புவார். தித்திக்கும் திருவருள் தீங்கனியைப் புனிதவதியாரின் கணவன் புசிக்கும் பேறு பெற்றான்.

பாமாலை தொடுத்து ஈசன் பாதம் பணிந்த நாவுக்கரசர் திருவதிகை வீரட்டானத் திருக்கோயில், வாயிலில் நின்றுகொண்டு, தெருவில் வருவார் போவாராய மக்களையெல்லாம் கூவி யழைத்து, "மனிதர்களே! இங்கே வாருங்கள்! வாருங்கள்! ஒரே ஒரு செய்தி சொல்லுகிறேன், கேளுங்கள்! கனி ஒன்று தருகின்றேன்; தெவிட்டாத தீங்கனி தருகின்றேன்," என்று கூறிப் பெருங் கூட்டத்தைத் திரட்டி விட்டார். எல்லோரும் இவர் என்ன கனியைத் தரப்போகிருரோ? தெரியவில்லையே? என்று ஏங்கி நிற்கும் வேளையில், "கனியைத் தந்தால் அதனை உண்ணுதற்கு உங்கட்கு வலிமையுண்டா?" என்று கேட்டார். 'அப்படியாளுல் என்ன கனி அது? சொல்லுங்கள்!' என்றனர் மக்கள்.'அதுவா! ஈசன் எனும் கனி! ஏசற்றவர்கட்குச் சாலவும் இனிக்கும் இன்னருள் தீங்கனி. சுட்டறிவொழித்துத் திருவருள் மெய்ஞ்ஞானம் பெற்ற மேலோருக்கே அது சாலவும் இனிக்கும்' என்று அறவுரை பகர்ந்தருளினர் நாவுக்கரசர்.

'மனிதர் காள்! இங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி உண்ணவும் வல்லிரோ?
புனிதன் பொற்கழல் ஈசன் எனும்கனி
இனிது சாலவும் ஏசற் றவர்கட்கே'

என்பது அப்பர் அருளிய அறவுரையாகும்.

இத்தகைய ஏசற்ற நிலை, மாசற்ற மாண்புடையார்க்கே உளதாகும். அருட்பிரகாச வள்ளலார் கருவிலேயே திருவருள் நலம்பெற்ற தெய்வச் சீரடியார். ஆதலால் பிறக்கும்போதே அவர் மெய்ஞ்ஞானம் கைவரப்பெற்ற ஞானக்குழந்தையாக அவதரித்தருளினர்.

அதனாலேயே ஐந்து மாதக் குழந்தையாக இருக்கும் போதே, தம்மைப் பெற்ற தந்தையார் கரங்களில் கிடந்த வண்ணம் ஞானநடத்தரசின் புண்ணியப் பொதுநடச் சிறப்பைக் கண்டு உள்ளம் களிபூத்தார். இராமலிங்கரது இதயத்தே அப்போது பூத்த அருள் மலர் காயாகக் காய்த்தது. 'அவ் வருட்காய் முதிர்ந்து கனியுமோ? கனிவதற்கு முன்னால் வெம்பி விழுந்து விடுமோ? பொது நடம் செய்யும் புண்ணியன் இன்னருளால் வெம்பாது முதிர்ந்து பழுத்தாலும் என் கைக்கு எட்டுமோ? அத் திருவருள் தீங்கனி, எனது கைக்குக் கிட்டும் முன்னால் மலமாயைக் குரங்கு கவர்ந்து கொள்ளுமோ? மாயைக் குரங்கு கவராது மலர்க்கரத்தே கிடைத்தாலும் மனமகிழ யான் உண்ணுவேனோ? உண்ணும் போதே தொண்டை விக்கிக்கொள்ளுமோ? விக்கல் வாராது அக்கனியை நன்கு சுவைத்து உண்ணுவதற்கு அருட்பெருஞ்சோதி ஆண்டவன் திருவுளம் இரங்குவானோ? ஒன்றும் அறிகின்றேனில்லையே?' என்று திருவருள் ஞானத் தெய்வக் குழந்தையாய்த் தோன்றியருளிய வள்ளலார் பெருமானே உள்ளங் கரைந்து உருகிப்பாடும் தெள்ளமுதத் திருப்பாட்டை விருப்புடன் ஓதி இன்புறுங்கள்!

களக்கமறப் பொதுநடம்நான்
கண்டுகொண்ட தருணம்
கடைச்சிறியேன் உளம்பூத்துக்
காய்த்ததொரு காய்தான்
விளக்கமுறப் பழுத்திடுமோ?
வெம்பிஉதிர்ந் திடுமோ?
வெம்பாது பழுக்கினும்என்
கரத்தில்அகப் படுமோ?

கொளக்கருதும் மலமாயைக்
குரங்குகவர்ந் திடுமோ?
குரங்குகவ ரா(து)எனது
குறிப்பில்அகப் படினும்
துளக்கமற உண்ணுவனோ?
தொண்டைவிக்கிக் கொளுமோ?
சோதிதிரு வுளம்எதுவோ?
ஏதும்அறிந் திலனே!

---

## கஎ. சம்பந்தர் சீர்

சைவம் தழைக்கத் தோன்றியருளிய சான்றோருள் திருஞானசம்பந்தரும் ஒருவர். அவர் சைவ சமயாசாரியர் நால்வருள் தலைவரெனப் போற்றும் தகுதியுடையார். அவர் காலத்தில் வாழ்ந்த நாவுக்கரசரும் பிற்காலத்தில் விளங்கிய சுந்தரரும் தலைக்கொண்டு போற்றிய அருட்பெருஞ் செல்வர். "நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன், நல்லிசை ஞானசம்பந்தன், நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தன்" என்று அவரைப் பலவாறு சுந்தரர் தமது செந்தமிழ்த் தேவாரப் பாக்களில் சிந்தை குளிர்ந்து ஏத்துகின்றார்.

காவிரி வளங்கொழிக்கும் சோழ நாட்டில் சீர்காழித் திருநகரில் அவதரித்த செல்வராய சம்பந்தரை இறைவி ஞானப்பாலை ஊட்டி ஞானசம்பந்தராக்கியருளினார். ஞானப்பாலை உண்ட நற்றவக் குழந்தை மூன்றாண்டுப் பருவத்திலேயே முத்தமிழ்க் கவிதை

பாடவல்ல வித்தகம் பெற்றது. இரு கடைவாய் ஒழுகப் பால் பருகிநின்ற பாலரைத் தந்தையார் கோல் கொண்டு ஓச்சிப் 'பாலூட்டியவர் யார்?' என்று அதட்டியபொழுதே அவர் 'தோடுடைய செவியன்' என்று தொடங்கிப் பாடியருளினர் அன்றோ!

இறைவி ஊட்டிய இன்னமுதப் பாலால் ஞான மழை பொழியத் தொடங்கினார் சம்பந்தர். தாம் பெற்ற திருவருள் திறத்தால் தமிழகத்தைச் சூழ்ந்த சமணிருள் போக்கிச் சைவப் பேரொளி வீசுமாறு செய் தருளினார். இத்தகைய சம்பந்தர் சீரினைச் சேக்கிழார் பெருமான் ஆயிரத்திற்கும் மேற்பட்ட பாக்களால் பெரிய புராணத்தில் பேசி யருளுவார். அறுபத்து மூன்று அடியார்களின் வரலாற்றை நாலாயிரம் பாக் களால் விளக்கியருளும் சேக்கிழார் பெருமான், ஞான சம்பந்தர் வரலாற்றை மட்டும் ஆயிரத்திற்கும் மேற் பட்ட பாக்களால் விளக்குவாராயின் சம்பந்தர் சீர் யாராலும் அளவிட்டுக் கூறும் தரத்ததன்று. இதனாலேயே 'பிள்ளை பாதி புராணம் பாதி' என்னும் பழமொழி வழங்கத் தொடங்கியது.

ஐந்து மாதக் குழந்தையாக இருக்கும்போதே தில்லைக் கூத்தன் திருவருள் பெற்ற நல்லருட் செல்வ ராய வள்ளலார் பெருமான் ஓதாது உணர்ந்த உத்தமர். கந்தப் பெருமானை யன்றி இந்த உலகில் அவருக்கு எந்தப் பெருமானும் கல்வியூட்டியதில்லை. முருகவேள் திருவருளால் ஒன்பதாண்டுப் பருவத்திலேயே அவரது உள்ளத்தில் கவிதை வெள்ளம் ஊற்றெடுத்தது. அவ் வருளாற்றலைத் தாய்போல் அவரைக் காத்துவந்த அவர்தம் அண்ணியாரே அறிந்தார். அதனால் அவர்

தலைமையுரைது பணியை ஒருநாள் ஆற்றும் வாய்ப்பை அடைந்தார்.

இராமலிங்க வள்ளலாரின் தமையனாராகிய சபாபதி பிள்ளை புராணச் சொற்பொழிவு புரியும் புலமையாளர். வாரத்திற்கு ஒருநாள் சென்னையைச் சேர்ந்த முத்தியாலுபேட்டைச் சோமு செட்டியார் மனையில் இரவு ஏழு மணி முதல் ஒன்பது மணிவரை புராண விரிவுரை யாற்றுவார். ஒரு சமயம் செட்டியார் தமது மனையில் கூத்தப்பெருமான் திருவுருவம் ஒன்றைப் புதியதாக அமைத்து, அன்று 'சம்பந்தர் சீரை'ப் பற்றிச் சொற்பொழிவு செய்யுமாறு சபாபதி பிள்ளையை வேண்டியிருந்தார். அன்று சபாபதி பிள்ளைக்குத் திடீரென்று தலைவலியும் காய்ச்சலும் தாங்க முடியாமல் வந்து வருத்தின. அதனால் அன்றைய சிறப்பு நிகழ்ச்சிக்குச் செல்ல முடியவில்லையே என்று அவர் உள்ளம் வாடியது. அதனைக் கண்ட அவர் மனைவியார், இராமலிங்கரது அருளாற்றலைப் பற்றி அவருக்கு மெல்ல அறிவித்தார். அவ் வம்மையாரது வற்புறுத்தலால் இசைந்த சபாபதி பிள்ளை, தம்பியை அழைத்து, "நீ செட்டியார் வீட்டிற்குச் சென்று செய்தியைக் கூறிச் சம்பந்தர் புராணத்தில் சில பாடல்களை வாசித்துவிட்டு வருக" என்று பணித்தார். அப் பணியைத் தலைமேல் தாங்கிய இராமலிங்கர், செட்டியார் வீட்டை யடைந்து செய்தியைக் கூறி, விரிவுரைப் பணியைத் தொடங்கினார்.

'வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்'

என்ற முதற் பாடலை வாசித்தருளினார். பின்பு அதன் பொருளை விளக்கலானார். ஏழு மணிக்குத் தொடங்கிய விரிவுரை, இரவு பன்னிரண்டு மணியாகியும் பாட்டின் இரு வரிகட்கே விளக்கம் சொல்லி முடிந்தது. விரிவுரை கேட்ட மக்களெல்லாம் தேனுண்ட வண்டென அவரது சொல்லமுதத்தில் திளைத்து மூழ்கினர். கேட்டாரைப் பிணித்துக் கேளாரும் வேட்குமாறு விளக்கிய இராமலிங்கரது நாவன்மையைக் கண்டு வியவாதார் எவருமிலர்.

இளைஞராகிய இராமலிங்கரின் முதற் சொற்பொழிவைக் கேட்டு இன்புற்ற சோமு செட்டியார், இனி இவரே விரிவுரை நிகழ்த்த வேண்டும் என்று விரும்பிக் கேட்டுக் கொண்டார். 'சம்பந்தர் சீரைப் பற்றிய விரிவுரை பல நாட்களாகத் தொடர்ந்து நடைபெற்று வந்தது. தமையனார் சபாபதி பிள்ளையும் தம்பியின் விரிவுரையை ஒருபால் மறைந்திருந்து கேட்டு மகிழ்ந்தார்; வியந்தார். 'தணிகைக் குமரனே தம்பியாக வந்தான்!' என்று கூத்தாடினார்.

ஞானசம்பந்தர் வரலாற்றைப் பேசி வந்த வள்ளலார் பெருமான் ஒருநாள் அவர் நிகழ்த்திய அற்புதம் ஒன்றை அழகுற விளக்கிக்கொண்டிருந்தார். திருமயிலைச் சிவநேசச் செட்டியாரின் செல்வத் திருமகள் பூம்பாவையின் எலும்புகளை இறைவன் புகழ்பாடிப் பெண்ணுருவாக்கிய செய்தி அவரது உண்ணெகிழுமாறு செய்தது. அதனை நினைந்து நினைந்து நெஞ்சம் நெகிழ்ந்துருகிய வள்ளலார், "இறைவனே! உனது புகழைப் பண்ணமைந்த பாக்களால் ஞானசம்பந்தர் பாடியருள, அதனால் வெள்ளெலும்புகள் விரும்பத்தக்க பெண்ணுருப் பெற்று விளங்கின; ஆனால் அச்

சைவமே வடிவாகிய சம்பந்தர் சீரைப் பாடினால் சாம்பலும் தெய்வத் திருவுருப் பெற்றுவிடும் அல்லவா?" என்று கூறியருளினார். இங்ஙனம் ஞானசம்பந்தர் சீரினை ஞாலம் அறியப் பாடியருளிய வள்ளலாரின் தெள்ளமுதத் திருவருட்பா ஓதுவார் உள்ளத்தை உருக்குவதாகும்.

'பண்ணால்உன் சீரினைச்சம் பந்தர்சொல வெள்ளெலும்பு
பெண்ணான(து) என்பார் பெரிதன்றே!—அண்ணா! அச்
சைவவடி வாம்ஞான 'சம்பந்தர் சீர்' உரைக்கில்
தெய்வவடி வாம்சாம்பர் சேர்ந்து!'

இங்ஙனம் ஞானசம்பந்தர் அருள்வரலாற்றில் உள்ளம் தோய்ந்து சொல்லி வந்த வள்ளலார் பெருமான், அதனால் தாம் பெற்ற பேரின்பத்தை மற்றவர் அறியுமாறு விளக்கியருளினார்.

'பேரார் ஞான சம்பந்தப்
பெருமா னே!நின் திருப்புகழைப்
பேசு கின்றோர் மேன்மேலும்
பெருஞ்செல் வத்திற் பிறங்குவரே'

என்பது அவரது அனுபவத் திருவாக்கு.

## கஅ. கான்மாறி ஆடிய கற்பகம்

சைவ நன்மக்கள் 'கோயில்' என்று சிறப்பாகக் குறிப்பிடும் தலம் சிதம்பரம். அதனைத் தில்லை யென்றும் சொல்லுவர். வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி நீராகி எல்லாமாய் விளங்கும் ஈசன் வானவெளியாக ஒளிரும் உண்மையை உணர்த்துவது அத்தலம். அம்பரம் என்பது வெளி. சித்து என்பது ஞானம். சிதம்பரம் என்பது ஞான வெளியினைக் குறிக்கும். அத்தலத்தில் ஞான வெளியினில் வானவரீசன் மோன நடம் புரிகின்றான். அவன்தான் தில்லையம்பலக் கூத்தன்.

தில்லைக் கூத்தனைத் தரிசித்துத் திருவருள் பெற்ற அடியார்கள் பலர். ஞானசம்பந்தர் முதல் ஞானச் செல்வராகிய இராமலிங்கர்வரை எண்ணற்ற புண்ணியச் செல்வர்கள் அச் 'செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே!' என்று சிந்தை மகிழ்ந்து பாடியுள்ளனர். 'தென்தில்லை மன்றினுள் ஆடிய கூத்தன், இன்று எனக்கு ஆரமுதம் ஆனான்; அவன் தென்பால் உகந்தாடும் தில்லைச் சிற்றம்பலவன்' என்று மனங் கனிந்து உருகினார் மாணிக்கவாசகர்.

தில்லைப் பொன்னம்பலத்தில் திருக்கூத்தாடிய பெருமான் தென்திசை நோக்கியே ஆடி வந்தான்; தமிழ் மதுரைத் திருநகரில் உள்ள வெள்ளியம்பலத்தே துள்ளியாடினான். நெல்லைத் தாமிர சபையிலும் தாண்டவம் ஆடினான். இறுதியில் குற்றால மலைச்சாரலுக்கே

குதித்தோடிச் சென்று ஆங்குள்ள சித்திர சபையில் விசித்திர நடம்புரிகின்றான்.

இவ்வாறு ஆடிக்கொண்டே தென்திசை நோக்கி ஓடிவந்த கூத்தப்பெருமான் செயலைக் கூர்ந்து நோக்கிய பரஞ்சோதியார் அதற்குக் காரணம் கற்பிக்கலானார். இடையறாது ஆடிக்கொண்டிருக்கும் அப்பெருமானுக்கு இளைப்பும் களைப்பும் ஏற்பட்டன. அவற்றைப் போக்குதற்குச் சிறந்த மருந்தனைய மலைக்காற்றைப் பெற விரும்பினான். பொதிய மலையில் பூத்து வரும் மெல்லிய தென்றல், தனது திருமுகத்தில் வீச வேண்டுமென்று விரும்பினான். செந்தமிழைச் செவியாரப் பருக வேண்டும் என்றும் சிந்தை கொண்டான். இக் காரணங்களால் அவ் ஈசன் தென்பால் உகந்தாடினான் என்றார் அப் பரஞ்சோதியார்.

'கடுக்க வின்பெறு கண்டனும்
தென்றிசை நோக்கி
அடுக்க வந்துவந்(து) ஆடுவான்
ஆடலின் இளைப்பு
விடுக்க ஆரமென் கால்திரு
முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி
மாந்தவும் அன்றோ!'

என்பது அவர் பாடிய திருவிளையாடற் புராணப் பாடல்.

குற்றாலக் கூத்தனைத் தரிசித்து, அவனது வற்றாத பேரருளைப்பெற்ற ஞானசம்பந்தர்,

'அம்பால் நெய்யோ(டு) ஆடல் அமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான் மேய நன்னகர் போலும் நமரங்காள்!'

என்று அடியார்கட்கு அறிவுறுத்தினர். இவ் உண்மையைக் காண விரும்பிக் குற்றால நன்னகரைக் குறுகிய திருநாவுக்கரசர், அப்பெருமானைத் தரிசித்து உள முருகினர்.

'உற்றார் யாருளரோ?—உயிர்
கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல்லால்
உற்றார் யாருளரோ?'

என்று அவரும் வியந்து போற்றினர். இந்த உண்மையை மாணிக்கவாசகப் பெருமானும் நன்கு உணர்ந்து,

'குற்றாலத்(து) அமர்ந்துறையும்
கூத்தா!உன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக்
கசிந்துருக வேண்டுவனே'

என்று பாடியருளினர். இங்ஙனம் அடியார்களின் உள்ளங்கவர்ந்த அழகிய கூத்தன் ஆலங்காட்டு மணி மன்றத்திலும் மகிழ்ந்து ஆடியருளினன். ஆதலின் கூத்தப்பெருமான் ஆடும் சபைகள் ஐந்து என்பர் அறிஞர். அவற்றைப் 'பஞ்ச சபைகள்' என்று பாராட்டுவர்.

ஐந்து மன்றங்களில் அடியார் உளங்குளிர இறைவன் ஆடும் திருக்கூத்தினைத் தில்லையில் ஐந்து மாதப் பருவத்திலேயே இராமலிங்கர், தந்தையார் கரத்தமர்ந்து சிந்தை குளிரத் தரிசித்தார். அப்பைய தீட்சிதர் காட்டிய கற்பூர ஒளியில் கூத்தப்பெருமானது திருக்கோலத்தைக் கண்குளிரக் கண்டு கலகல என்று சிரித்தார். தெய்வ நலங்கனியும் திருக்குழந்தையின் பெருமையினை அப்போதே கண்ட அப்பைய தீட்சிதர் 'இது

அம்பலவாணன் அருட்குழந்தையே' என்று வாயார வாழ்த்தித் திருநீறு அணிந்தார்.

இத்தகைய இராமலிங்கர் ஒருகால் மதுரைத் திரு நகரைக் காண வந்தார். அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாயீசனைத் தரிசித்தார். அப்பெருமான் அருகில் 'தென்றிசை நோக்கி வெள்ளியம்பலத்தே கால் வீசியாடும் கற்பகமாகிய கூத்தப்பெருமானையும் தரிசித்தார். தில்லைக்கூத்தன் திருக்கோலத்திற்கும் மதுரைக்கூத்தன் திருக்கோலத்திற்கும் உள்ள வேறுபாட்டை உள்ளத்தே நினைத்தார். பொன்னம்பலக் கூத்தன் வலக்காலை ஊன்றி இடக்காலை வீசி இன்பக் கூத்தாடுகின்றான். வெள்ளியம்பலக் கூத்தனோ இடக் காலை ஊன்றி வலக்காலை வீசியாடுகின்றான். இந்த வேறுபாடு எதனால் என்பதை எண்ணினார்.

பண்டொருகால் பாண்டியன் இராசசேகரன் என்பான் கூத்துக்கலையினைச் சின்னாள் பயின்றான். சிறிதளவு பயின்றதுமே அவனுக்கு மேனி மெலிவுற்றது. கால்கள் வேதனையுற்றன. உடனே மதுரைத் திருக் கோவிலை அடைந்தான். வெள்ளியம்பலக் கூத்தனைத் தரிசித்து வேண்டினான். 'பெருமானே! அடியேன் சின்னாள் சிறிதளவே கூத்துக்கலையினைப் பயின்றேன். அதனால் உடல் நலிவுற்றேன். நீர் எத்தனை காலமாக இங்ஙனம் ஆடிக்கொண்டிருக்கிறீர்! இவ்வாறு இடையறாது ஆடினால் நும் மேனி வாடிவிடாதா? உமக்குக் களைப்பும் இளைப்பும் உண்டாகுமே? நீர் ஆட்டத்தை நிறுத்தினாலோ இவ் உலகம் இயங்கா தொழியும். ஆதலின் நுமது ஓயாத ஆட்டங் கண்டு வாட்டங் கொண்ட எளியேனது உள்ளம் களிகொள்ளுமாறு

காலை மாற்றியேனும் ஆடிக்காட்டுவீர்! இன்றேல் எனது உயிரை மாய்த்துக்கொள்வேன்' என்று உறுதி மொழி கூறி நின்றான். வானம் மழை பொழியத் தவறினாலும் தான் கூறிய மொழிதவறாத உறுதியுடையவன் இம்மாறன். அவன் உயிரை மாய்த்துக்கொள்ளாத வண்ணம் கால் மாறி ஆடினான் அந்தக் கூத்தன்.

இந்தச் செய்திகள் எல்லாம் இராமலிங்கரது இதய கமலத்தில் தேனைக ஊறித் தித்திக்கச் செய்தன. அப்போது தமிழர் உள்ளமெல்லாம் அள்ளூரக் கசிந்த நறுந்தேன் அனைய கவியமுதை அருந்திப் பாருங்கள்? தாய்க்கு மார்பில் பால் ஊறாது போனாலும் பிள்ளை அதன்பால் வாய் வைப்பதை மறப்பதில்லை. வெறு மார்பையேனும் பல்லால் சுவைத்துக்கொண்டிருக்கும். அப்பிள்ளையைப் போலவே, வள்ளலாரும் இறைவன் அருட்பால் சுரக்காது போனாலும், தாம் அவர் அருளை இரக்காது இருப்பதில்லை என்று மதுரை மன்றாடியிடத்து மன்றாடி வேண்டுகின்றார்.

'வான்மா றினும்மொழி மாறாத
மாறன் மனம்களிக்கக்
கான்மாறி யாடிய கற்பக
மேநின் கருணையென்மேல்
தான்மாறி னும்விட்டு நான்மாறி
டேன்பெற்ற தாய்க்குமுலைப்
பான்மாறி னும்பிள்ளை பான்மாறு
மோ? அதிற் பல்லிடுமே!'

என்பது வள்ளலாரின் தெள்ளமுதத் திருவருட்பா வாகும்.

## கக. நெஞ்சில் விழுந்த இடி

'அடி வயிற்றில் இடி விழுந்ததுபோல', என்றொரு பழமொழி வழங்குவதுண்டு. எதிர்பாராத பேரிழப் பொன்று எவர்க்கேனும் ஏற்படுமாயின் 'ஐயோ! அடி வயிற்றில் இடி விழுந்ததே!' என்று வருந்தித் துடிப்பர். மன்னுயிர்க்கு வரும் இன்னலைத் தன்னுயிர்க்கு வந்தது போல் எண்ணி இரங்கும் தண்ணருளாளர் பிறிதோர் உயிர் துன்புறுங் காலத்துத் தாம் பெரிதும் வருந்துவர்; அதனைப் போக்குதற்குப் பெருமுயற்சி செய்வர். அதுவே அறிவுடையார் செயல் என்று அறிவுறுத்து வார் திருவள்ளுவர்.

'அறிவினுன் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தன்நோய்போல் போற்ருக் கடை'

என்பது அவர் வாய்மொழியாகும்.

சைவ சமயாசாரியர் நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசகர், பாண்டியனின் மதியமைச்சர். அவர் தமது அமைச்சுத்திறனுல் 'தென்னவன் பிரமராயன்' என்ற திருவுடைய விருது பெற்று விளங்கினுர். பதினறு ஆண்டுப் பருவத்திற்குள்ளேயே பார்வாய்க் கலைகள் அனைத்தும் கற்றுத் தெளிந்தார். இவரை அமைச்சராகப் பெற்ற அரிமர்த்தன பாண்டியன் பெரு மகிழ்வுடன் ஆட்சியை நடத்தினுன். அந்நாளில் அவன் தனது குதிரைப் படையைப் பெருக்குதற்கு விரும்பினுன். களஞ்சியத்திலுள்ள பொன்னையெல் லாம் எடுத்துச் சென்று எழில்மிக்க பரிகளை வாங்கி

வருமாறு அமைச்சரைப் பணித்தான். அரசனது ஆணையைச் சிரமேற்கொண்ட அமைச்சர் பொன்னை எடுத்துக்கொண்டு கீழைக்கடல் துறையை நோக்கிச் சென்றார்.

அமைச்சராகிய வாதவூரர் குதிரை வாங்கச் செல்லும் வழியில் திருப்பெருந்துறைத் தலத்தை அடைந்தார். பெருந்துறை மேவிய பெருமானை வணங்கித் திருக்கோவிலை வலமாகச் சுற்றிவந்தார். அவர் வரும் வழியில் சிவபெருமானே குருந்த மர நீழலில் குரு வடிவாய் எழுந்தருளியிருக்கக் கண்டார். அடியற்ற மரம்போல் அப்பெருமானது திருவடியில் விழுந்து இறைஞ்சினர். ஞானசிரியனாய் வீற்றிருந்த ஈசன், வாதவூரர்க்குச் சிவஞானச் செல்வத்தை உபதேசித்தருளினன். ஞானோபதேசம் பெற்ற வாதவூரர் தம் ஞானசிரியனால் உபதேசித்தருளப்பெற்ற ஐந்தெழுத்து மந்திரத்தை வந்தித்து வாழ்த்தினர்.

'நமச்சிவாய வாழ்க! நாதன்தாள் வாழ்க!
இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க!'

என்பது அவர் அருளிய சிவபுராணத் தொடக்கமாகும்.

சிவநாமச் சிறப்பையும் சிவனது பெருமையையும் விளக்கியருளிய வாதவூரரது வாக்கு நலத்தை உணர்ந்த பெருமான் 'மாணிக்கவாசகர்' என்னும் மாண்புறு பட்டத்தை அவருக்குச் சூட்டி மறைந்தருளினன். வாதவூரர் குதிரை வாங்குதற்குக் கொண்டுவந்த பொன்னையெல்லாம் திருப்பெருந்துறைக் கோவிலைப் புதுப்பிக்கவும் சிவனடியார்களை உபசரிக்கவும் செல

விட்டார். இச் செய்தியை ஒற்றர் வாயிலாக உணர்ந்த பாண்டியன் மாணிக்கவாசகரை மதுரைக்கு வர வழைத்தான். அவருக்குப் பல துன்பங்களைக் கொடுத் தான். இறுதியில் வையையாற்றுச் சுடுமணலில் நிறுத்தித் தலையிற் கல்லைச் சுமத்தினன்.

அடியார் படுதுயர் ஆயினவெல்லாம் அகற்றி யருளும் பெருமான் வையையில் கங்கை வெள்ளம் பொங்கிக் கரை புரண்டு வருமாறு கடைக்கணித்தான். அந்த வெள்ளம், மதுரைமாநகரை அள்ளிச் சென்று விடுமோ என்று அஞ்சிய மன்னன், வீட்டிற்கு ஒருவ ராகச் சென்று வையைக் கரையைக் கட்டுமாறு கட்டளை பிறப்பித்தான். ஆயிரம் பிறை கண்ட நரை மூதாட்டியாகிய வந்தி யென்னும் பிட்டு வாணிச்சியின் பங்குக் கரையைக் கட்டுவதற்கு இறைவனே கூலியா ளாகக் கூடை தாங்கி வந்தான். அவள் அளித்த உதிர்ந்த பிட்டையுண்டு, கரையைக் கட்டாது மண்ணை வெட்டியும் மற்றொருபால் அள்ளிக் கொட்டியும் விளை யாடி வந்தான். சிறிது நேரத்தில் களைப்புற்றவனைப் போல மரத்தடியில் படுத்து உறங்கலுற்றான்.

மாலை வேளையில் பாண்டிய மன்னன் பரிவாரம் சூழ, வையைக் கரைக்கு வந்தான். வந்தியின் பங்கு அடைபடாமல் இருக்கக் கண்டான். 'வந்தியாள் எங்கே?' என்று வினவினன். வந்தியின் கூலியாளாக வந்த பெருமான் மரத்தடியில் துயில்வதைக் கண்டும் பணியாளர்களோ அமைச்சர்களோ எழுப்பவும் அஞ் சினர். உடனே பாண்டியன் தானே அவ்விடம் வந்தான். கையிலிருந்த பிரம்பால் கூலியாளாக வந்த பெருமான் திருமுதுகில் ஓங்கி ஓரடி யடித்தான்.

பெருமான் முதுகில் விழுந்த அடி, மன்னன் உட்பட மாநிலத்து உயிர்கள் எல்லாவற்றின் மீதும் விழுந்தது. ஒருவன் முதுகிற் பட்ட அடி, உலகிலுள்ள உயிர்கள்மீதெல்லாம் படுமாயின் அவன் உயிருக்கு உயிராய் உலகெங்கும் நிறைந்த இறைவனாக அன்றோ இருக்கவேண்டும்! வாதவூரர் பொருட்டு இறைவனே இங்ஙனம் எளியனாய் வருவானாயின் அவரது பெருமையையும் அவர் பெற்ற திருவருளையும் என்னென்பது! உண்மையை அறியாது அமைச்சர் பெருமானை அல்லலுக்கு உள்ளாக்கிவிட்டோமே! என் செய்வேன்! என் செய்வேன்! என்று பலவாறு புலம்பினான் பாண்டியன். அவரைச் சிறை விடுதலை செய்து திருவடியில் விழுந்து பணிந்து மன்னித்தருள வேண்டினான். அங்கு நிகழ்ந்தவற்றையெல்லாம் அறிந்த மாணிக்கவாசகர் தம் பொருட்டுப் பெருமான் எளிவந்த வான் கருணைத் திறத்தை எண்ணியெண்ணி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். ஆடினார், பாடினார்; கூலியாளாக வந்த பெருமான் இருந்த இடம், நின்ற இடம், கிடந்த இடம் எல்லாவற்றையும் சென்று கண்டு ஆனந்தக் கூத்தாடினார். ஆனால், பெருமான் தம்பொருட்டு மாறன் பிரம்படி பட்டார் என்ற செய்தியைத் தெரிந்ததும் அவரது நெஞ்சில் பேரிடியொன்று விழுந்ததுபோல் இருந்தது.

இந்த நிகழ்ச்சியை ஒருகால் இராமலிங்க அடிகளார் அறிந்தார். 'ஐயோ! மாணிக்கவாசகர் பொருட்டு மதுரை மாநகரில் இறைவன் பாண்டியனால் அடிபட்டுப் பொன்பட்ட மேனியில் புண்பட்டான் என்று இன்று கேள்வியுற்ற எனது நெஞ்சில் இடி விழுந்தது போலன்றோ இருக்கிறது; அன்று இறைவன் அடிபட்ட நாளில் வாழ்ந்த மாணிக்கவாசகருடைய தூய நெஞ்

சத்தில் எவ்வளவு பெரிய இடி விழுந்திருக்கும்! அவர் என்னபாடு பட்டிருப்பார்! அதனை என்றால் அள விட்டும் சொல்ல முடியுமோ?' என்று இரங்குவார் இராமலிங்க அடிகளார். உயிர்கள் படுந்துன்பம் காண உள்ளம் பொறுத வள்ளலார் உயிருக்குயிராய் ஒளிரும் ஆண்டவன் அடிபட்டான் என்னும்போது உள்ளம் துடியாதிருப்பரோ? அவரது உள்ள நிலையைத் தெள் ளமுத அருட்பாவொன்றால் அழகுற விளக்கியுள்ளார்.

வன்பட்ட கூடலில் வான்பட்ட
வையை வரம்பிட்டநின்
பொன்பட்ட மேனியில் புண்பட்ட
போதிப் புவிநடையாம்
துன்பட்ட வீரர் அந்தோ! வாத
வூரர்தம் தூயநெஞ்சம்
என்பட்ட தோ! இன்று கேட்டவென்
நெஞ்சம் இடிபட்டதே.

---

## ௨0. நாவரசும் பாவரசும்

சைவம் தழைக்கத் தோன்றியருளிய தெய்வப் பெருமக்களாகிய சமய குரவர் நால்வருள் பருவத்தால் மூத்த பெருமான் திருநாவுக்கரசர். அவர் எண்பத் தோராண்டுகள் இவ்வுலகில் வாழ்ந்து பண்பட்ட தம் அனுபவ உண்மைகளை அரிய தேவாரப் பாசுரங்க ளாகப் பாடியருளியவர்; பல்வேறு சமய சாத்திரங் களையும் கற்றுத் தேர்ந்த முற்றறிவாளர். அவர் சமண சமயம் சார்ந்த நாளில் சமணப் பெருமக்களெல்லாம் தருமசேனர் என்று தலைக்கொண்டு பாராட்டி, அச் சமய குரவரென ஏற்றுக்கொள்ளப் பெற்றவர்.

திருநாவுக்கரசர் இளமைப் பருவத்தினராக இருக்கும்போதே அவரது நல்லறிவுத் திறங்கண்டு வியந்த தமக்கை திலகவதியார், அவரை உலகிற்கு உருவாக்கித் தரும் பொறுப்புணர்ச்சியாலேயே உயிர் தாங்கியிருந்தார். இன்றேல் அவர் தமக்கென உறுதி செய்யப் பெற்ற கணவராகிய கலிப்பகையார் போர்க்களத்தில் உயிர்நீத்த நாளில் தம் உயிரையும் போக்கியிருப்பார். தம்பியாரைத் தாரணிக்குப் பேரறிவாளராக்கி உதவும் பெரும்பணியை மேற்கொண்டிருந்த திலகவதியாருக்கு நாவுக்கரசரின் மதமாற்றம் அடிவயிற்றில் இடிவிழுந்ததுபோல் இருந்தது. அவரை மீண்டும் சைவத்திற்குக் கொண்டுவர வேண்டும் என்று துடியாய்த் துடித்தார். திருவதிகை வீரட்டானத் திருக்கோவிலை அடைந்து, தம்பி மீண்டும் சைவம் சாரவேண்டும் என்று பெருமான் திருவருள் வேண்டி வரங்கிடந்தார். நித்தலும் எம்பிரானுடைய கோயில் புகுவார்; புலர்வதன் முன் அலகிடுவார்; மெழுக்கிடுவார்; பூமாலை புனைந்து பெருமானுக்கு அணிந்து ஏத்துவார்; புகழ்ந்து பாடுவார்; அலறுவார். இங்ஙனம் பல்லாண்டு தவங்கிடந்ததன் பயனைப் பெருமான், அம்மையார் கனவில் தோன்றியருள் செய்தான்.

...............'உன்னுடன் பிறந்தான்
முன்னமே முனியாகி எனையடையத் தவம் முயன்றான்
அன்னவனை இனிச்சூலை மடுத்தாள்வன்'

என்று கூறி மறைந்தான்.

அங்ஙனமே 'அருளாு பெருஞ்சூலையினால் ஆட்கொள்ள அடைந்து உய்ந்த' திருநாவுக்கரசர் சைவ வேளாளர் குலத்துதித்த சான்றோராவர். சென்ற நூற்றாண்டில் கற்பவர் சித்தமெல்லாம் தித்திக்குமாறு

பத்தாயிரம் அருட்பாக்களை அள்ளி வழங்கிய வள்ளலார் பெருமானும் சைவ வேளாளர் குலத்துதித்த சான்றோராவர். இவரைப் போன்று பிற்காலத்தில் அருள்மணம் கமழும் அரிய பாக்களைப் பாடியவர் எவருமிலர்.

பிற்காலப் பாவரசாய்ப் பெருமையுற்று விளங்கிய வள்ளலார் பெருமானை உலகிற்கு உருவாக்கி யுதவிய பெருமை அவர்தம் அண்ணியாராகிய பாப்பாத்தியம்மையாரைச் சாரும். இளமையிலேயே பெற்றோரை இழந்து வருந்திய இராமலிங்கத்தைப் பேணி வளர்த்து, அவரது தெய்வத் திருவருள் திறனை உலகம் தெரியச் செய்தவர் அவர் அண்ணியாரே. அவ் அம்மையார் இராமலிங்கத்தின் இனிய அன்னையாராகவே விளங்கி, அவரது நாவன்மையும் பாவன்மையும் நலம் பெறுதற்குப் பெருந்துணையாக இருந்தார்.

திருநாவுக்கரசர்பால் பேரன்பு பூண்ட அடியவராகிய அப்பூதியடிகள், திருநாவுக்கரசு என்ற திருநாமத்தையே மந்திரமாகச் சிந்தையிற் கொண்டு நாவினிக்க நாள்தோறும் நவின்று, நாடரிய வீடுபேறு எய்தினார். அந்தணச் செல்வராகிய அப்பூதியடிகளின் ஒப்பற்ற உயரிய பண்பைக் கேள்வியுற்ற நாவுக்கரசர் ஒருகால் அவரது மனைக்கே எழுந்தருளினார். அப்பூதியடிகளோ நாவுக்கரசரை நேரிற் கண்டறியார். எவரோ ஓர் அடியவர் என்று எண்ணி வரவேற்று உபசரித்தார். தாம் வழிபடும் தொழுகுலமாகிய நாவுக்கரசரே எழுந்தருளியிருக்கிறார் என்பதை அறிந்தவுடன் அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு ஓர் அளவேயில்லை. அற்றவர்கள் அருநிதியம் பெற்றதுபோல ஆடினார், பாடினார்,

ஆனந்தக் கூத்தாடி இன்புற்றார். அவருக்கு அறுசுவை அமுதூட்ட ஆசை கொண்டார்.

அப்பூதியடிகளின் மைந்தனாகிய மூத்த திருநாவுக்கரசு, அடியவர்க்கு அமுது படைக்க, வாழையிலை கொய்துவரத் தோட்டத்துள் சென்றான். இலை கொய்யும்போது அவனை விடநாகம் தீண்டிவிட்டது. அடியவர் அமுதுண்ணல் தடையுறக் கூடாதே என்றெண்ணி உயிர் தாங்கி ஓடோடி வந்தான். தாயாரின் பக்கத்தில் குருத்திலையைக் கொணர்ந்து வைத்து மயங்கி வீழ்ந்தான். அவனது உடம்பில் கண்ட குறிகளால் நச்சரவம் தீண்டி மாண்டான் என்பதைப் பெற்றோர் உணர்ந்தனர். பிணவுடலைப் பாயுள் சுற்றி ஒருபால் வைத்து அடியவர்க்கு அமுதூட்டத் தொடங்கினர்.

திருநாவுக்கரசர் அமுதுண்ண அமர்ந்தார். அப்பூதியடிகளின் மக்களெல்லோரும் உடன் அமர்ந்தனர். அவருள்ளே மூத்த திருநாவுக்கரசைக் காணோம். 'எங்கே மூத்த திருநாவுக்கரசு?' என்று வினவினார் அடியவர். 'இப்போது இங்கு அவன் உதவான்' என்று உரைத்தனர் பெற்றோர். உண்மையை உரைக்க வென்று வற்புறுத்தினார் அடியவர். உடனே அப்பூதியடிகள் நடந்ததைச் சொன்னார். திங்களூர்த் திருக்கோவில் முன்னர்க்கொண்டு பிணத்தைக் கிடத்தினர். செந்தமிழரசராகிய திருநாவுக்கரசர் சிவபிரானைச் சிந்தையில் நினைந்து கனிந்து 'விடந்தீர்த்த பதிகம்' பாடினார். உறங்கி விழிப்பவனைப்போல உயிர்பெற்றெழுந்தான் மூத்த திருநாவுக்கரசு. பெற்றோரும் உற்

ரேரும் பேருவகை பூத்தனர். திருநாவுக்கரசரின் திருவருள் திறத்தை வியந்து மகிழ்ந்து போற்றினர்.

பாவரசாகிய வடலூர் வள்ளலார், தாம் நிறுவிய சத்தியஞான சபையில் தைப்பூச நன்னாளிற் பெருவிழா எடுத்தனர். அதைக் காணப் பல்லாயிரம் மக்கள் பல்வேறு ஊர்களிலிருந்தும் திரண்டு சென்றனர். குறிஞ்சிப்பாடி வணிகர் ஒருவரும் அக்கூட்டத்துள் சென்றார். அவர் செல்லும் வழியில் ஒரு கள்ளிச்செடியின் பக்கமாகச் சிறுநீர் பெருக்குதற்காகச் சென்று உட்கார்ந்தார். அங்கிருந்த புற்றில் வாழ்ந்த விடநாகம் பொங்கிச் சீறி எழுந்தது. அது கண்டு அஞ்சி நடுங்கிய வணிகர் 'வடலூர் இராமலிங்கத்தின்மேல் ஆணை' என்று கத்தினார். அவ்வளவுதான்! படமெடுத்துப் பாய்ந்துவந்த நாகம் அடங்கியொடுங்கிப் புற்றின் வாயிலேயே தலையை வைத்து மூன்று நாட்களாக இரை தேடாது பட்டினி கிடந்தது.

வடலூர்த் தைப்பூச விழாவைக் கண்டு திரும்பும் குறிஞ்சிப்பாடி வணிகர், வள்ளலார் பெருமான் முன்னர் வந்தார். அப்போது வள்ளலார், "மூன்று நாட்களாகவா ஓர் உயிரைப் பட்டினி போடுவது? உடனே ஆணையை அகற்றி வாரும்" என்று உத்திரவிட்டார். வள்ளலாரின் வாய்மொழியைக் கேட்டு வியந்த வணிகர் ஓடோடிச் சென்று, முன்னர்க் கண்ட புற்றை அணுகினார். புற்றின் வாயிலில் சோர்ந்து கிடக்கும் நச்சரவின் நிலை கண்டு கலங்கினார்; ஆணையை அகற்றினார். அதன் பின்னர் அந்நாகம் புற்றுள் சென்று மறைந்தது.

ஏழாம் நூற்றாண்டில் நாவரசின் திருப்பெயர் அப்பூதியடிகட்கு மந்திர மொழியாய்ச் சிறப்புற்று விளங்கி

யதுபோலப், பத்தொன்பதாம் நூற்றுண்டில் பாவரசாகிய இராமலிங்க வள்ளலாரின் திருநாமமும் அவர்பால் பத்திபூண்ட அன்பர்கட்கெல்லாம் அரிய மந்திர மொழியாய்த் திகழ்ந்தது. இராமலிங்க அடிகளார் கூடலூர் அய்யாச்சாமி செட்டியார் வீட்டில் தங்கியிருந்தபோது ஒருநாள் அவரது வீட்டின் பின்பக்கமிருந்த வாழைத் தோட்டத்துள் சென்ருர். வாழை மரம் ஒன்றிலிருந்த நாகம் அவரது தலைமேல் தீண்டிவிட்டது. திருவருள் பெற்ற இராமலிங்கப் பெருமானது திருமேனியைத் தீண்டிய விடநாகம் உடனே மாண்டொழிந்தது. அவரது திருநாமத்தைச் சொல்லவும் தீண்ட வந்த நாகம் தீண்டாது ஆணைக்கு அடங்கி நின்றது. நாவரசர் ஆற்றிய அற்புதமும் பாவரசர் காட்டிய அற்புதமும் திருவருள் திறத்தை எத்துணைச் சிறப்பாக விளக்குகின்றன!

நாவரசர் வாழ்வில் நடைபெற்ற அற்புதங்கள் பற்பல. அவற்றுள்ளே கல்லைத் தெப்பமாக மிதக்கச் செய்த அற்புதம், வள்ளலாரது உள்ளத்தைப் பெரிதும் கொள்ளை கொண்டுவிட்டது. சமண சமயத் தலைவராய் விளங்கிய நாவரசர் சூலைநோயின் துயரம் தாங்க மாட்டாமல் தமக்கையைச் சரண்புகுந்து சைவராயினர். இதனை அறிந்த சமண மன்னனுகிய மகேந்திரப் பல்லவன் பல தொல்லைகளை அன்னவருக்கு விளைத்தான். அனைத்தையும் அவர் சிவனருளால் வென்ருர். இறுதியில் கல்லோடு பிணைத்துக் கட்டிக் கடலில் தள்ளுமாறு கட்டளையிட்டான்.

'கற்றுணை பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே'

என்று நமச்சிவாயப் பதிகம் பாடினூர் நாவரசர். கல் தெப்பமாக மிதந்தது; கரையேறினூர். இதனைத் தமது இதயத்துட் கொண்ட இராமலிங்கப் பாவரசர் தில்லைக் கூத்தரசனை நோக்கி வேண்டுகின்றூர்.

" அரசே! உனது அருளைப் பெற்ற நாவுக்கரசைப் போலச் சிறியேனும் மாயையாகிய சமணூல் மன்மாகிய கருங்கல்லோடு கட்டப்பெற்றுப் பாவமாகிய ஆழ்கடலில் வீழ்ந்து அல்லற்படுகின்றேன். சமணரால் கடலில் தள்ளப்பெற்ற நாவுக்கரசர் நவின்ற அதே ஐந்தெழுத்து மந்திரத்தையே அடியேனும் ஓதுகின்றேன். எளியேனை இன்ப வீடாகிய கரையில் ஏற்றியருளுக" என்று இரங்கிப் பாடும் பாவரசின் பாடலைப் பத்தியோடு பாடிப் பாருங்கள்!

'சீர்தரு நாவுக் கரையரைப் போல்இச் சிறியனுமோர்
கார்தரு மாயைச் சமணூல் மனக்கருங் கல்லிற்கட்டிப்
பார்தரு பாவக் கடலிடை வீழ்த்திடப் பட்டுழன்றே
ஏர்தரும் ஐந்தெழுத் தோதுகின் றேன்கரை யேற்றரசே.'

---

## உக. ஆளாவது எப்படி ?

நாலுபேருக்கிடையில் நாமும் ஓர் ஆளாக வேண்டும் என்று விரும்பாத மனிதன் யார்? மற்றவர் கண்டு மதிக்கும் மாண்புடையவனூக ஒவ்வொருவனும் விளங்க ஆசைப்படுகிறூன். பெற்றோர்களும் தாம் பெற்ற பிள்ளை, மற்றவர்களால் பாராட்டப்பெற வேண்டும் என்று பேராசைப்படுகின்றனர். அங்ஙனம் பாராட்டப் பெறுதலே பெற்றோர்க்கு அழகு என்று பேசுவார் ஔவையார்.

'சான்றோன் எனக்கேட்ட ஈன்றோர்க்கு அழகு'

என்பது அத் தமிழ் மூதாட்டியாரின் அமுதமொழி.

தாயொருத்தி கருவுற்றுத், தான் பெற்ற பிள்ளை ஆண்பிள்ளையாக இருந்தால், பெற்ற பொழுதே அதனைப் பெறுதற்கு உற்ற துன்பமெல்லாம் அகன்று பெருமகிழ்வுறுவாள். அங்ஙனம் கருவுயிர்க்கும் கடுந் துன்பத்தையும் காற்றாய்ப் பறந்து மறைந்துபோகு மாறு செய்யும் ஆண்பிள்ளை சாண்பிள்ளையாக இருந் தாலும் சான்றோன் என்று கற்றவரும் மற்றவரும் களித்தேத்தும் பெருமையுற்றால் அவனைப் பெற்ற தாய்க்கு ஈன்ற பொழுது ஏற்பட்ட இன்பத்தினும் எல்லையற்ற இன்பம் ஏற்படும் என்று சொல்லுவார் வள்ளுவர்.

'ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்'

என்பது அவர்தம் வாய்மொழி.

ஒருவனைச் சான்றோனாக்கிப் பெருமக்கள் போற்று மாறு செய்யவேண்டிய பொறுப்பு, தந்தையைச் சார்ந்ததாகும். 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே' என்று பொன்முடியார் பொன்னான மொழி யால் இக்கருத்தை வலியுறுத்துவார். 'சான்றோர் நிறைந்த நல்லவைக்கண் முந்தி இருக்குமாறு செய்வது, தந்தை மகனுக்கு ஆற்றும் நன்றி' என்றே நவில்வார் பெருநாவலர். இங்ஙனம் கற்றவர் போற்றும் பெற்றி யுடைய ஆளாவது அறிவாலும் ஒழுக்கத்தாலுமே.

இறைவன் திருவருளைப் பெறுதற்குரிய ஆளா வதே அருமையுடைய செயலாகும். இம்மையில் ஆளாதல் மறுமையில் ஆளாதற்கு அடிகோலுவ